## ஆண்டு சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

தர்ம சக்கரம் தை மாத இதழ் முதல் அடுத்த மார்கழி மாத இதழ் வரை பன்னிரண்டு இதழ்களும் ஒரு சக்கரமாகக் கணக்கிடப்படுகின்றன.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் செய்தித் தாள்களில் உள்ளவைபோன்று தாற்காலிகமானவைகளாக இல்லாமல் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சியாக இருக்கின்றன. ஆதலால் ஓர் ஆண்டுக்கான பொருளடக்கத்தை அச்சாக்கி மார்கழி மாத இதழுடன் வைத்து அனுப்புகிறோம். தை முதல் மார்கழி முடிய பன்னிரண்டு மாத தர்மசக்கர இதழ்களையும் அப்பொருளடக்கத்தை வைத்து பைண்டு செய்து கொண்டால் ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும் மற்றவர்களுக்குப் படிக்கத் தருவதற்கும் வசதியாக இருக்கும்.

ஆதலால் தர்ம சக்கரத்தில் புதிய சந்தாதாரர்கள் சேரும் போது தை இதழ் முதலே சந்தாதாரராய்ச் சேர்ந்துகொண்டு பயன்பெறக் கோருகிறோம். அன்பர்கள் முயன்று தை மாத இதழ் முதலே புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திப் பலரையும் ஆத்மீக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யக் கோருகிறோம்.

குறிப்பிட்ட அளவே இதழ்கள் அச்சாக்கப்படுவதால் கூடிய விரைவில் தை மாதம் புதுப்பித்துக் கொள்ள வேண்டிய பழைய சந்தாதாரர்களும் உடன் புதுப்பித்துக்கொண்டு மற்றும் பலரையும் புதிய சந்தாதாரர்களாக அறிமுகம் செய்யக் கோருகிறோம். ஆண்டு சந்தா 1—6—82 முதல் ரூ 15-00 ஆகவும் சகாய சந்தா ரூ. 10-00 ஆகவும் உயர்த்தப்பட்டிருக்கிறது. சந்தா தொகையை அனுப்பும்போது மறவாமல் தங்கள் சந்தா எண்ணையும் குறிப்பிடக் கோருகிறோம்.

---

## ஸ்ரீ தாயுமானவர் இயற்றிய பாடல்கள்

உபநிஷதங்கள் கூறுகின்ற பரதத்துவங்கள் யாவற்றையும் தாயுமானவர் பாடல்களில் காணலாம். இவருடைய பாடல்கள் யாவும் மறைந்துபட்டுப் போகாது தமிழ் மக்கள் கைவசம் இருப்பது தமிழ் நாட்டின் தவச் செல்வமாகும். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு இவருடைய நூல்கள் ஒப்பற்ற அருள் விருந்தாக அமைந்துள்ளன. ஒவ்வோர் ஆத்ம சாதகரும் இவருடைய பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களை அறியும் வண்ணம் இதுவரை சுமார் 8 தலைப்புக்கள் கொண்ட பாடல்களுக்கு ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் விரிவான விளக்கம் தந்துள்ளார்கள். ஒவ்வொன்றும் தனித்தனி நூலாக யாவரும் படித்துப் பயன்பெறும் வகையில் வெளிவந்துள்ளது. அவைகளாவன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பரசிவ வணக்கம் | ரூ. 1-00 | 5. | ஆனந்தமானபரம் | ரூ. 3-00 |
| 2. | பரிபூரணானந்தம் | ரூ. 3-00 | 6. | சுகவாரி | ரூ. 3-00 |
| 3. | சின்மயானந்த குரு | ரூ. 3-00 | 7. | கருணாகரக்கடவுள் | ரூ. 3-50 |
| 4. | மௌனகுரு வணக்கம் | ரூ. 3-00 | 8. | எங்கும் நிறைகின்ற பொருள் | ரூ. 2-50 |

இந்த எட்டு நூல்களையும் ஒரே சமயத்தில் தபால் மூலம் பெற்றால் தபால் கட்டணத்திற்காக ரூ. 4-50 மட்டும் சேர்த்து அனுப்பினால் போதுமானது.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | துந்துபி ஹூ தை மீ | ஆரம் 1 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்



### சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா : ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்குவந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட்செய்த ரூபாய் நூற்றைம் பதையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா : ரூ. 15 செலுத்தியதுமுதல் அல்லது அடுத்த மாதம்முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும் படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா : மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாத லால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறு கிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்றுப் படித்துப்பயனடையக்கோருகிறோம்.

**உள்நாடு வருட சந்தா ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா ரூ. 35-00**

## அந்தர்யோக விவரங்கள்

**சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 16—1—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: தெய்விக வாழ்க்கைச் சங்கம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**கோவை ஜில்லா—பொள்ளாச்சியில் 23—1—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: மஹாத்மா காந்தி மண்டபம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**திருநெல்வேலி ஜில்லா—தூத்துக்குடியில் 23—1—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சிவன்கோவில் தெருவிலுள்ள சச்சிதானந்த சபை*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**

**திருநெல்வேலி ஜில்லா—சிவத்தையாபுரத்தில் 23—1—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ முத்து மாலை அம்மன் இந்து தொடக்கப்பள்ளி*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்**

**மதுரை ஜில்லா—பேரையூரில் 6—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: மேலப்பரங்கிரி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**

**சேலத்தில் 20—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ சாரதா கல்லூரி பிரார்த்தனை கொட்டகை*

*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**

*உணவு வசதி: பகல்உணவுக்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*





प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | துந்துபி ஹு தை மீ | ஆரம் 1

## பிரார்த்தனை

यत्रौतमेतत्प्रोतं च विश्वमक्षयमव्ययम् ।
आधारभूतः सर्वस्य प्रसीदतु स मे हरिः ॥

— विष्णु पुराणम्

*யத்ரௌ தமேதத் ப்ரோதம் ச விச்வமக்ஷயம் அவ்யயம் ।*
*ஆதாரபூத: ஸர்வஸ்ய ப்ரஸீதது ஸ மே ஹரி: ॥*

— *விஷ்ணு புராணம்*

*அனைத்துக்கும் ஆதாரமாய் இருப்பவனும் பிரபஞ்சத்துக்கு இருப்பிடமாய் இருப்பவனும் தீமையை அகற்றுபவனுமாகிய அந்த ஹரி எனக்கு அருள் புரிவானாக.*

வந்தித்து நின்னை மறவாக் கடன்ஆகச்
சிந்திக்க நின்னதுஅருள் செய்யாய் பராபரமே.

— *தாயுமானவர்*

# அருள் விருந்து



மக்கள் சேவையில் ஈடுபடுவதே மகேசுவர பூஜையாம்.

தூய வாழ்வு வாழ்பவனுக்குப் பிரபஞ்சம் முழுதும் அன்பு மயம்.

அலுவல்களை ஊக்கத்துடன் ஆற்று. அவைகளுக்கிடையில் அமைதியுற்றிரு.

இவ்வையக வாழ்வு நீண்ட ஒரு விளையாட்டாக ஞானிக்கு விளங்குகிறது.

நிரந்தர ஒற்றுமையில் நம்பிக்கை வைக்காதிருப்பவனும் நாஸ்திகனும் ஒருவரேயாம்.

பெரியோர்கள் சிறியவர்களுக்குச் சலுகை காட்டுதற்கேற்ப இருதரத் தாரும் இன்பமடைகின்றனர்.

மனிதனுடைய திறமையை நெருக்கடி வெளிப்படுத்துகிறது. மற்று, சுக ஜீவனமோ அதை மறைக்கிறது.

சூரிய வெளிச்சத்தில் பனி அகல்வது போன்று புன்முறுவலில் வாழ்க்கையி லுள்ள இடுக்கண்கள் அகலுகின்றன.

நாட்டின் பழம் பெருமையை எண்ணி மகிழ்வுற்றிருப்பது போதாது. இன் றைக்கு அதன் பணியில் தீவிரமாக ஈடுபடு.

நெறி நிற்பவருக்கு விபத்து ஏதும் இல்லை. நெறி நில்லார்க்கு அனுகூல மான சூழ்நிலையும் பிரதிகூலமானதாக மாறுகிறது.

செடியின் மகிமை மலராக மிளிர்கிறது. அங்ஙனம் பரமன் படைப்பில் மாயப் பிரபஞ்சம் அவனுடைய மகிமையாக மிளிர்கிறது.

பல காரணங்களை முன்னிட்டுச் செல்வம் கரைகிறது. ஆனால் எக்கார ணத்தை முன்னிட்டும் மனதின் உறுதிப்பாடு கலையலாகாது.

விழித்துக் கொண்டவுடன் கனவு உலகம் மறைந்துபட்டுப்போகிறது. அங்ஙனம் ஆத்மபோதத்தில் விழிப்புண்டாகும் பொழுது பிரபஞ்ச வாழ்வு மறைந்துபட்டுப் போகிறது.

திரைப்படக் காட்சியில் படத்தின் பாங்கு திரையின்மீது ஏற்றப்படுவது போன்று தென்படுகிறது. ஆயினும் திரை யாண்டும் தன் மயம். அதே விதத்தில் உலக வாழ்விலுள்ள இன்ப துன்பங்கள் ஆத்மா வின்மீது ஏறியிருப்பது போன்று தென்படுகின்றன. ஆயினும் ஆத்மா யாண்டும் தன்மயம்.

---

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர்: ''தாயே, தயைகூர்ந்து அவனை உன்னிடம் கவர்ந்து இழுத்துக் கொள்வாயாக. அவனுடைய விஷயங்களில் மேலும் கருத்தைச் செலுத்த முடியாத நெருக்கடியில் நான் இருக்கிறேன்.'' மகேந்திரரிடம் இப்பொழுது பரமஹம்சதேவர் பகர்வாராயினர்: ''என்னுடைய மனது உன்னுடைய மைத்துனனிடம் அபிமானம் வைக்கும் நிலையில் இப்பொழுது அமைந்திருக்கிறது.''

கிரீஷரிடம் பரமஹம்சர் கூறுவாராயினர்: ''இடையிடையே பொருந்தாத புன்மொழிகளையும் அவதூறுகளையும் நீ வாரிக்கொட்டுகிறாய். ஆயினும் அதைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை. உள்ளத்தினுள்ளே புதைந்து கிடக்கின்ற இக்கருத்துக்கள் வெளியே கிளம்பிவருவது நல்லது. இரத்தத்திலே சிறிது விஷம் கலப்பதன் விளைவாகச் சிலர் நோய்வாய்ப்படுகின்றனர். இங்ஙனம் இரத்தத்தில் கலந்த விஷம் எவ்வளவுக்கெவ்வளவு உடலினின்று வெளிப்படுத்தப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்கு நலன் உண்டாகும்; நோயும் குணமடையும். சிலவேளைகளில் உபாதி முடிவுக்கு வருகின்றபொழுது அது பெருமிதமாக ஓலமிடுகிறது. மரக்கட்டை ஒன்றில் தீப்பற்றி எரிகின்றபொழுது அது சட்புட் எனச் சப்தம் போடுகிறது. அது முற்றிலும் வெந்து போன பிறகு சப்தம் போடும் செயலும் முடிவுறுகிறது.

''நாள் ஏற ஏற நீ ஆத்ம பரிபாகம் அடைவாய். நாள் ஏற ஏற முன்னேற்றத்தையும் நீ காண்பாய். நீ அடைந்துவரும் மேலாம் பான்மையைப் பார்த்து மக்கள் வியப்புறுவார்கள்.

''திரும்பத் திரும்பக் கல்கத்தாவுக்கு வருவது எனக்குச் சாத்தியப்படாது. அதனால் தோஷம் ஏதுமில்லை. உன்னுடைய முயற்சியைக் கொண்டு நீ முன்னேற்றம் அடைவாய்.''

பரமஹம்சதேவருடைய பாரமார்த்திக நிலை இப்பொழுது மீண்டும் அதிகரித்தது. தம் வழிபடு தெய்வமாகிய அன்னை பராசக்தியுடன் அவர் ஏதோ பேசலாயினர்: ''தாயே, ஏற்கனவே நல்லவனாயிருப்பவனை மேலும் நல்லவனாக்குவதால் ஆகும் பயன் யாது? செத்தவனை மீண்டும் அடித்துக்கொல்லுதல் என்னும் செயலால் ஆகும்பயன் யாது? இன்னும் நிமிர்ந்து நிற்கின்ற எதிரி ஒருவனை மாய்த்துத் தள்ளுதலிலேயே உன் மகிமை வெளியாகிறது. அங்ஙனம் அஞ்ஞானத்தில் உழல்பவனை நீ மீட்பாயாகில் அதுவே உன்னுடைய செயற்கரிய செயலாகும்.''

சிறிது நேரம் பரமஹம்சர் மௌனமுற்றிருந்தார். சிறிது உரத்த குரலிலே பரமஹம்சர் பகர்வாராயினர்: ''தாயே, நான் தட்சிணேசுவரத்துக்குத் திரும்பிப் போகிறேன்.'' குழந்தையொன்று தன் தாயின் அழைப்புக்குத் தூரத்திலிருந்து காது கொடுத்தால் அது எங்ஙனம் தன் தாயினிடம் ஆவலோடு திரும்பி வருமோ அந்தப் பாங்கு பரமஹம்சதேவரிடம் அமைந்திருந்தது. மீண்டும் ஒருமுறை சமாதிநிலை அடையப்பெற்று அவர் அசைவற்றிருந்தார். கண் கொட்டாமல் பக்தர்கள் அவரைப் பார்த்த வண்ணம் நின்றுகொண்டிருந்தார்கள்.

''லூச்சி என்னும் பண்டத்தை நான் மீண்டும் புசியேன்'' என்று பரவசநிலையில் இருந்தபடியே அவர் பகர்ந்தார். அக்கம் பக்கத்திலிருந்து வந்திருந்த வைஷ்ணவ அர்ச்சகர்கள் சிலர் அவ்விடத்தினின்று இப்பொழுது புறப்பட்டுப் போயினர்.

அகமகிழ்வுற்றிருந்தவராகப் பரமஹம்சதேவர் தென்பட்டார். அந்நிலையிலிருந்தபடி பரமஹம்சர் பக்தர்களுடன் உரையாடினார். அப்போது ஏப்ரல் மாதம். கோடையின் வெப்பம் பகல் நேரத்தில் அதிகரித்திருந்தது. தணுப்பான பட்சணம் ஒன்றை (Ice-cream) தேவேந்திரர் ஆயத்தப்படுத்தியிருந்தார். அதைப் பரமஹம்சருக்கும் சுற்றிலும்

இருந்தவர்களுக்கும் அவர் எடுத்து வழங்கினார். ''மீண்டும் வழங்குங்கள், மீண்டும் வழங்குங்கள்'' என்று மகேந்திரர் அடங்கிய குரலில் இயம்பினார். அதைக் கேட்டவுடன் எல்லாரும் 'கொல்'லென்று நகைத்தனர்.

அந்த நவீனப் பண்டத்தைப் பார்த்த பரமஹம்சதேவர் ஒரு குழந்தையின் பாங்கில் மகிழ்வுற்றிருந்தார்.

அந்தப் பாடகர் பாடிய கீர்த்தனம் மிக நன்றாயிருந்தது. கோபியருடைய மனப் பான்மையை அந்தக் கீர்த்தனம் நன்கு படம் பிடித்துக் காட்டியது: ''மாதவிக் கொடியே, எனக்கு இனியவனான கண்ணனைத் திருப்பி என்னிடம் கொடுத்துவிடு!''

கண்ணன்மீது பேரன்புக்காதல் கொண்டவர்களாகக் கோபியர்கள் இருந்தார்கள். அவர்கள் பேரன்பு என்னும் மதுபானம் அருந்தியவர்களாகத் தென்பட்டார்கள். கண்ணனிடம் அவர்கள் வைத்திருந்த பேரன்பைத்தான் என்னென்று பகர்வது! பித்துப் பிடித்தவர்கள் போன்று அவர்கள் தென்பட்டார்கள்.

பக்தர்களுள் ஒருவர் மற்றொரு பக்தரைச் சுட்டிக்காட்டி, ''இவர் தம்மை ஒரு கோபியாக வைத்துப் பிரேமையுற்றிருக்கிறார்'' என்று பரமஹம்சரிடம் தெரிவித்தார்.

ராம்: ''அது மட்டுமன்று; மனம் குழைந்துள்ள பேரன்பும் உறுதியான மனம் படைத்த ஞானமும் சேர்ந்து இவரிடம் அமைந்திருக்கின்றன. தூய பக்தியும் தூய ஞானமும் ஒன்றே. பரமனைக் குறித்து மனம் இளகியிருப்பதும், அவனை அடையப் பெற்றதன் விளைவாக மனது வஜ்ஜிரம் போன்று அசையாதிருப்பதும் ஒன்றேயாம்.''

பரமஹம்சதேவர்: ''நீ பகர்வது யாது?'' சுரேந்திரருடைய நலனைக் குறித்துப் பரமஹம்சர் வினவினார்.

ராம்: ''அவரை இங்கே அழைத்து வரும்படி நான் அவருக்குச் சொல்லியனுப்பினேன். ஆயினும் அவர் இன்னும் வந்து சேரவில்லை.''

பரமஹம்சதேவர்: ''அவன் புரிந்துவருகிற உத்தியோகம் மிகக் கடினமாயிருப்பதால் அலுத்துப் போகிறான். ஆதலால் அவனுக்குக் களைப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் தான் விரும்பியபடி அவனுக்கு இங்கே வந்து நம்மோடு அடிக்கடி உறவாட இயலவில்லை.''

ஒரு பக்தர்: ''இந்த ராம்பாபு தங்களைக் குறித்துக் கட்டுரை எழுதிக்கொண்டிருக்கிறார்.''

பரமஹம்சதேவர்: (புன்னகை பூத்தவராகப் பகர்ந்ததாவது) ''இவர் எழுதுவது யாது?''

பக்தர்: ''பரமஹம்சர் கடவுளிடம் வைக்கும் பக்தி எனும் விஷயம் பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.''

பரமஹம்சர்: ''மிக நன்று. இத்தகைய விஷயங்களில் கருத்தைச் செலுத்துவதால் ஆத்ம சாதகன் ஒருவனுக்கு இயல்பாகவே மேலான கொள்கைகள் மனதில் வந்து படிகின்றன. அதுமட்டுமன்று; இதன் விளைவாக இவனுடைய கியாதி ஓங்கும்.''

கிரீஷ்சந்திரகோஷர் (புன்னகையுடன் கூறியதாவது): அவன் தன்னைத் தங்களின் சீடன் என்று கூறுகிறான்.''

பரமஹம்சதேவர்: ''எனக்குச் சிஷ்யர் யாரும் இல்லை. உண்மையில் கடவுள் ஒருவரே எல்லார்க்கும் குருவாகிறார். பக்தனுக்கு அருள்துறையில் பணிவிடை பண்ணுகிற நிலையில் என்னை நான் வைத்துள்ளேன். இராமனுடைய பக்தருக்குப் பக்தனாக நான் இருக்கிறேன்.''

அக்கம் பக்கத்திலிருந்த அன்பர்கள் சிலர் தக்ஷிணேசுவர ஆலயத்தைப் பார்க்க வந்தார்கள். ஆயினும் அன்னவர்கள் சரியான மனநிலை படைத்திருந்தவர்களாகவும் மகிழ்வூட்டுபவர்களாகவும் தென்படவில்லை. பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: ''இது எத்தகைய இடமாக இருக்கிறது? பக்தர்கள் யாரையுமே நான் இங்கே கண்ணுறவில்லை.''

இப்பொழுது தேவேந்திரர் பரமஹம்சதேவரை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்றார். உள்ளே இருந்த மகளிர் பரமஹம்சதேவருக்குப் பட்சணங்கள் சிலவற்றைப் படைத்துப் பணிவிடை பண்ணினார்கள். பரமஹம்சரும் அவற்றை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டார். முகமலர்ச்சியுடன் பரம

ஹம்சதேவர் முன் மண்டபத்துக்கு மீண்டும் வந்து ஆசனத்தில் அமர்ந்தார். அவரைச் சுற்றிலும் பக்தர்கள் அமர்ந்துகொண்டனர்.

உபேந்திரரும் அக்ஷயரும் அவருக்கு இரு மருங்கிலும் அமர்ந்துகொண்டு அவருடைய பாதங்களை வருடிக் கொண்டிருந்தனர். "இந்த இல்லத்திலிருக்கும் மகளிர் நல்லியல் புள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் நாட்டுப் புறத்திலிருந்து இங்கு நகரத்துக்கு வந்திருப்பவர்கள். ஆதலால் இவர்கள் கள்ளங் கபடமில்லாத உள்ளங்களைப் பெற்றிருக்கிறார்கள். பக்தி உள்ளவர்களாக இருக்கிறார்கள்" என்று பரமஹம்சர் பாராட்டினார்.

பரமஹம்சதேவர் யாண்டும் தமக்கு இயல்பானதாயிருந்த தெய்விகப் பேரானந்தத்தில் மூழ்கியவராகத் தென்பட்டார். அவர் ஆனந்தப்பரவசத்துடன் பாடலொன்றுபாடலானார்: "பரம்பொருளைப்பற்றிய தெளிவான ஞானம் பெற விரும்பும் ஒருவன் கள்ளங்கபடமில்லாதவனாக இருக்கவேண்டும். கீழான பாங்கு ஏதும் அவனுடைய உள்ளத்தில் இருக்கலாகாது. அத்தகைய எளிய பாங்கு பக்தனுக்கு அமையுமிடத்தே பரம்பொருளின் அனுபூதியை அறிந்துகொள்ளக் கூடியவனாகிறான்."

பரமஹம்சதேவர் மற்றும் ஒரு பாடலைப் பாடலாயினர்: "சதா இங்குமங்கும் போய்க் கொண்டிருக்கும் பெரியோய்! சற்றுத் தாமதியும். திருவோட்டைக் கையில் ஏந்தியவராகச் சிறிதுநேரம் இங்கு இருப்பீராக. ஒளி வீசும் தங்கள் திருமுக விலாசத்தைப் பார்த்து மகிழ நான் விரும்புகிறேன்."

பரமஹம்சதேவர் மற்றும் ஒரு பாடலைப் பாடினார். "சான்றோர் ஒருவர் இங்குத் தென்படுகிறார். இவர் ஹிந்துக்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் இன்பம் நல்குபவர்."

இப்பொழுது கிரீஷ் சந்திரகோஷர் பரமஹம்சரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு போனார். தேவேந்திரரும் மற்ற பக்தர்களும் பரமஹம்சரை வண்டியில் ஏற்றுதற்காக அழைத்துச்சென்றவர்கள் ஒரு பிரமுகர் பெஞ்சில் உறங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். தேவேந்திரர் அப்பிரமுகரைத் தட்டி எழுப்பினர். அவரும் 'தடால்' என்று எழுந்து நின்றார். கண்ணைத்துடைத்துக்கொண்டு, "பரமஹம்சதேவர் வந்தாயிற்றா?" என்று கேட்டார். இதைக் கேட்டு எல்லாரும் நகைத்தனர்.

பரமஹம்சதேவர் வருவதற்கு வெகுநேரத்துக்கு முன்பே அப்பிரமுகர் அங்கு வந்திருந்தார். அவர் களைத்து இருந்ததால் அயர்ந்து தூங்கிவிட்டார். அதற்கேற்ற காரணமும் இருந்தது. இவருடைய செயல் பரமஹம்சதேவருடைய உபதேசமொழி ஒன்றுக்கு இலக்காயிற்று. நாட்டுப் புறத்தில் தெருக்கூத்துப் பார்க்க இளைஞன் ஒருவன் புறப்பட்டுப் போனான். கூத்துத் துவங்குதற்கு இன்னும் நேரம் இருக்கிறது என்று அவன் அறியவந்தான். ஆதலால் அவன் கையில் கொண்டுவந்திருந்த பாயை விரித்துத் தரையில் படுத்தான். அயர்ந்து தூங்கினான். தூக்கம் தெளிந்து எழுந்தவுடன் நாடகமும் முற்றுப்பெற்றுவிட்டது என்பதை அறியவந்தான். ஆதலால் பாயைச் சுருட்டிக்கொண்டு அவன் வீட்டுக்குத் திரும்பினான். இதுவே அவர் பகர்ந்திருந்த உபதேசமொழியாம்.

பரமஹம்சர் ஏறியிருந்த வண்டி தட்சிணேசுவரத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது.

மகேந்திரரை நோக்கிப் பரமஹம்சர் மகிழ்வுடன் பகர்ந்ததாவது: "நான் இந்தக் குளிர்ந்த பண்டத்தை (Ice-cream) வேண்டியவாறு அருந்தியுள்ளேன். நீ தட்சிணேசுவரத்துக்கு வரும்பொழுது அவைகளுள் நாலைந்து கொண்டுவா." மேலும் பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: "இப்பொழுது என் மனம் இந்த இளைஞர்களாகிய இளைய நரேந்திரன், பூரணன், உன் மைத்துனன் ஆகியோர்களிடத்துச் சிறிது அபிமானம் கொண்டிருக்கிறது."

மகேந்திரர்: "தாங்கள் துவிஜரைக் குறித்து இயம்புகின்றீர்களா?"

பரமஹம்சதேவர்: "இல்லை. அவன் நன்றாகத்தான் இருக்கிறான். நான் அவனுடைய மூத்த சகோதரனைக் குறித்து இயம்புகிறேன்."

வண்டியானது தட்சிணேசுவரத்தில் உள்ள காளி கோயிலுக்குப் போய்ச்சேர்ந்தது.

---

# எந்நாள் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

**8-15. ஈனம்இல்லா மெய்ப்பொருளை இம்மையிலே [காணவெளி**
**ஞானம் எனும் அஞ்சனத்தை நான்பெறுவது [எந்நாளோ.**

அஞ்சனம் – மை. ஈனம் – குறைவு.

உயிர்கள் அனைத்தும் படிப்படியாக ஞானம் அல்லது அறிவைப்பெற்று வருகின்றன. அங்ஙனம் அறிவைப் பெறுதற்கு இந்திரியங்கள் ஐந்தும் கருவிகளாக அமைந்துள்ளன. 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின் வகைதெரிவான் கட்டே உலகு' என்பது கோட்பாடு.

உயிர்களுக்கு இருப்பிடமாகிய இவ்வுலகில் தோன்றி வந்துள்ள ஜங்கமங்கள் அல்லது இயங்கு திணை உயிர்வகைகள் சுவைப்பதன் வாயிலாக உலகைப்பற்றிய அறிவைப் பெறுகின்றன. அடுத்தபடியாகக் கண்கொண்டு பார்த்துத் தோற்றத்தில் இருப்பவைகளைப் பொருள்படுத்துகின்றன. கேட்டறிதல் வாயிலாகப் பிறகு ஞானம் அதிகரிக்கிறது. 'கேள்வி முயல்' என்னும் கோட்பாடு இதை அனுசரித்து வந்துள்ளது. இங்ஙனம் ஐம்பொறிகளுக்கும் முற்றிலும் புலனாவதே பிரபஞ்சம் என்னும் பெயர் பெற்றுள்ளது. இதைத் தொடர்ந்து விவேகம் அல்லது நல்லறிவு என்பதை மனிதன் பெறுகிறான். விவேகத்தைப் பயன்படுத்துவதன் வாயிலாக இவ்வுலகைப்பற்றிய மற்றோர் உண்மையை மனிதன் அறியவருகிறான். நன்மை, தீமை இரண்டும் சேர்ந்தே அமைந்திருப்பது இவ்வையகம். இதில் இன்பமும் துன்பமும் நிறைந்திருப்பதை மனிதன் அறிய வருகிறான். கேட்டைத் தவிர்த்து நலனையே பெறமுடியுமா என்னும் கேள்வி மனிதன் உள்ளத்தில் உதிக்கிறது. துன்பத்தைத் தவிர்த்து இன்பமே பெறமுடியுமா என்னும் கேள்வி அடுத்தபடியாக உள்ளத்தில் உதிக்கிறது. இக்கேள்விகளுக்கு விடை கண்டுபிடிக்கும் பாங்கில் மானுடன் இவ்வையக வாழ்வைப் பல பிறவிகளில் துருவி ஆராய்ந்து பார்க்கிறான். ஆராய்ந்ததன் விளைவாகத் தெளிந்த முடிவு ஒன்றை அவன் அடையப் பெறுகிறான். கேடில்லாத நலனோ துன்பம் கலவாத இன்பமோ இவ்வையகத்தில் இல்லை. இவ்விரண்டுவித உண்மைகளையும் அறியவருகிறவனே விவேகியாகிறான்.

ஈனமில்லா மெய்ப்பொருள் இப்பிரபஞ்சத்தில் எங்குமே இல்லை. அனைத்திலும் ஈனம் அல்லது குறைவு ஒரு பக்கம் அமைந்திருப்பது வெளிப்படை. இனி, பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் தோன்றி இருந்து மறைகின்றன. எதற்குத் தோற்றமும் மறைவும் இருக்கின்றதோ அது மெய்ப்பொருள் ஆகாது. மெய்ப்பொருளில் எக்காரணத்தை முன்னிட்டும் எந்தவிதமான மாறுதலோ வேறுபாடோ வரலாகாது. ஆனால் மாயப் பிரபஞ்சமோ சர்வகாலமும் மாறி மாறி அமைந்துகொண்டேயிருக்கிறது. மனிதன் பெறுகிற இளமையிலும் முதுமையிலும் வேறுபாடு உண்டு. இத்தகைய விகாரங்கள் ஏதும் இல்லாததே மெய்ப்பொருள். அத்தகைய மெய்ப்பொருளாக இலங்குபவர் சிவனார் என்னும் பரவஸ்து. அவரை 'நன்றுடையான் தீதிலான்' என்கின்றனர் சான்றோர். அத்தகையவரை அடையப்பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்றும் ஆன்றோர் பகர்ந்திருக்கின்றனர்.

இம்மை என்பது இப்பிரபஞ்ச வாழ்வு. இதில் மனிதன் தோன்றியிருப்பதன் முடிந்த நோக்கம் பரமனை அடைதல். அங்ஙனம் பரமனை அடைவதற்கு உற்ற உபாயமாயிருப்பது விவேகி ஒருவன் வாழ்ந்துவருகிற நிறை வாழ்வு ஒன்றேயாம். அத்தகைய நிறை வாழ்வு ஆத்ம சாதனம் எனப் பகரப் பெறுகிறது. அதன் பொருட்டுச் சாதகன் ஐம்பொறிகளையும் அடக்கியாளுதல் வேண்டும். 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய் தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்' என்பது மறைமொழி. இப்பிரபஞ்ச வாழ்வு ஐம்பொறிகளைப் பயன்படுத்துவதில் துவங்குகிறது. பிறகு ஐம்பொறிகளை வெல்லுதலில் அது பூர்த்தியாகிறது. ஐம்

பொறிகளின் வாயிலாக மனிதனுக்குக் கிடைக்கின்ற அறிவு அரைகுறையானது. ஐம்பொறிகளைப் புலனிடத்து ஆசையோடு செல்லவொட்டாது தடுப்பதே அவைகளை அவித்தல் என்று சான்றோர் கருதுகின்றனர். கட்டில் அடங்காத மனது ஐம்பொறிகளைத் துணையாகக் கொண்டு புறவுலகில் காம, குரோத, மோக, லோப, மத, மாற்சரியம் என்று இயம்பப்படுகிற ஆறு குறைபாடுகளுடன் பாய்கிறது. அதன் விளைவாக மனிதன் இன்பத்துக்கு ஆளாவதைவிடத் துன்பத்துக்கு அதிகமாக ஆளாகிறான். விவேகம் என்னும் அங்குசத்தைக் கையாண்டு ஆத்ம சாதகன் ஐம்பொறிகளையும் அடக்கியாளக் கடமைப்பட்டிருக்கிறான். ஆசையின் வேகம் தணிதற்கேற்ப ஆத்மசாதகனுடைய அந்தக்கரணம் தெளிவடைகிறது.

அஞ்சனம் என்று இயம்பப் பெறுகிற மையைக் கண்களில் தீட்டினால் அந்தக் கண்களின் பார்வை தெளிவு அடைகிறது. மருத்துவத்துறைக்கு உரிய இவ்வுண்மை உருவகப்படுத்தி ஞானத் துறையிலும் கையாளப் பட்டிருக்கிறது. மனதின் தெளிந்த நிலையே ஞானக்கண் எனப் பெயர் பெறுகிறது. இதைச் சிவனார் பெற்றுள்ள நெற்றிக்கண் எனவும் இயம்புவது மரபு. சிவனார்க்கு யாண்டும் சொந்தமாயுள்ள சிவ ஞானக் கண் அல்லது ஞானக்கண்ணைப் பெறுவது மனிதனுக்குச் சாத்தியம். அது ஆத்மசாதனத்தின் வாயிலாகவே வாய்க்கிறது. மனதின் வேகம் அடங்குதற்கு ஏற்ப அதற்குக் கருவியாயிருக்கும் ஐம்பொறிகளின் வேகமும் தானாகவே தணிகிறது. சாதகனிடத்துச் சிவபோதம் ஓங்குதற்கேற்ப மனதின் மூர்க்கத்தனம் தானாகவே மறைந்து போகிறது. 'வேகங் கெடுத்தாண்ட வேந்தன் அடி வெல்க' என்னும் கோட்பாடு இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டது. தூய மனதே ஞானக்கண் ஆகிறது.

இந்த ஞானக்கண் வடிவெடுத்து வருவதற்கேற்ப இப்பிரபஞ்சத்தினுடைய காட்சி மெய்ப்பொருள் காட்சியாகத் திருந்தியமைகிறது. இதனின்று மற்றோர் உண்மை வெளியாகிறது. இப்பிரபஞ்சம் வேறு, பரமன் வேறு என்பது உண்மையன்று. உள்ளது ஒன்று. அந்த ஒரு பொருளை மாசுபடிந்த மனதைக்கொண்டும் கட்டிலடங்காத ஐம்பொறிகளைக் கொண்டும் பொருள்படுத்துமிடத்து அது மாயப் பிரபஞ்சமாகக் காட்சி கொடுக்கிறது. அதே பொருளைச் சுத்தமான மனதின் துணைகொண்டு காணுமிடத்து அது மெய்ப்பொருளாகக் காட்சி தருகிறது.

சிவஞானத்தைப் பெறுவதே மானுட ஜன்மத்தின் குறிக்கோள். இதை அடைதற்குப் பிரபஞ்ச வாழ்வில் வைத்துள்ள பற்றுதல் உதவமாட்டாது. 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பது ஆன்றோர் வாக்கு. ஆத்ம சாதகன் எவ்வளவு விரைவில் மனதை அடக்கவும் வெல்லவும் செய்கிறானோ அவ்வளவு விரைவில் அவன் பரமனைத் தரிசிப்பதற்குத் தகுதி உடையவனாகிறான் என்பது இக்கண்ணியின் உட்கருத்து.

**8-16. எல்லாம் இறந்தஇடத்து எந்தைநிறைவு**
**[ஆம்வடிவைப்**
**புல்லாமல் புல்லிப் புணருநாள் எந்நாளோ.**

புல்லாமல்புல்லி-ஜீவ போதத்தை ஒதுக்கிவிட்டுப் பரபோதத்தில் திளைத்திருந்து.

மனது செயல்புரிகின்றவிடத்துப் பிரபஞ்சத்தின் காட்சியை ஜீவாத்மன் நுகர்கிறான். மனது செயலற்றுப்போகுமிடத்துப் பிரபஞ்சக் காட்சியும் மறைந்துபட்டுப் போகிறது. கனவற்ற அயர்ந்த உறக்கமே இதற்குச் சான்றாகிறது. மக்கள் எல்லாருடைய அனுபவமும் இதுவேயாம். இந்நிலையை விழிப்பு நிலையில் உறுதிப்படுத்துவது ஆத்மசாதனங்களின் நோக்கமாம். பிரபஞ்ச வியவகாரங்கள் அனைத்தும் அடிபட்டுப் போகும்பொருட்டு ஆத்மசாதகன் யாண்டும் பரமனையே சார்ந்திருத்தல் வேண்டும். தன்னிடத்து இதுகாறும் இருந்து வந்த ஜீவபோதத்தை அழிக்க வேண்டும். இறைவனுடைய அருளும் ஜீவப்பிரயத்தனமும் ஒன்று சேருமிடத்து இந்நிலை சாத்தியமாகிறது. மேகங்கள் யாவும் அகலுமிடத்து எஞ்சியிருப்பது எல்லைகாணாத வெட்டவெளியேயாம். அது போன்று ஜீவாத்மன் உபாதிகளனைத்தையும் துடைக்குமிடத்து எஞ்சிநிற்பதுபரபோதமே என்பது இக்கண்ணியின் உட்கருத்து.

# பசிப்பிணியைப் போக்குவோம்

( சுவாமி விவேகானந்தர் )

நம்நாட்டு மக்களிடையே தமோகுணம் மிகுந்துள்ளது. நம் நாட்டின் பொதுமக்கள் செயலற்று உறங்கும் நிலையில் இருக்கிறார்கள். அவர்களிடத்து விழிப்புணர்ச்சியை ஊட்ட வேண்டும். அறநெறியைப் பின்பற்ற வேண்டுமென்ற உத்வேகம் நம் நாட்டு மக்களிடையே இல்லை. எதிர்காலத்தில் சிறப்புற்று விளங்கவேண்டும் என்ற ஆவல் எதுவும் அவர்களிடத்து இல்லை. அவர்களுக்கு நலன் செய்யப்போனால் நலன் செய்ய வருகின்றவர்களைத் தாக்கும் நிலையில் அல்லவா இருக்கின்றார்கள்! இத் தகையவர்களுக்குத் தொண்டு செய்தாக வேண்டும். குழந்தை ஒன்று மருந்து சாப்பிட மறுத்துக் கைகால்களை உதறுகிறது. அப்படிக் கட்டுக்கடங்காத குழந்தையின் தொண்டையில் மருந்தைச் செலுத்துவதற்கு வைத்தியர் ஒருவர் முயல்கின்றார் என்று வைத்துக்கொள்வோம். அவ் வைத்தியருடைய நிலையிலிருந்துகொண்டு நம் நாட்டு மக்களுக்குப் பணிசெய்ய வேண்டும்.

விளையாட்டுப் பொம்மைகளின்மீது இதயபூர்வமான மெய்யன்பு செலுத்தும் பொழுது அப்பொம்மைகள் உயிருடையவைகளாகிவிடுகின்றன என்று ஜப்பானியச் சிறுவர்கள் நம்புவதாக நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். அதுபோன்று நம் நாட்டு மக்களை நாம் இதயபூர்வமாக நேசித்தால் அவர்கள் உயிர்பெற்று எழுவார்கள். செல்வச் செழிப்பின்றி நற்காலத்தை இழந்து, அறிவை இழந்து, நசுக்கப்பட்டு, பட்டினியால் வாடி, சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டு, பொறாமை மிகுந்தவர்களாக இருக்கும் நம்நாட்டு மக்களை இதயபூர்வமாக நேசித்தால் விழிப்படையச் செய்யலாம்.

ஒவ்வொரு நாட்டுக்கும் அதற்கேற்ற இயல்பு உண்டு. அதை அந்த நாட்டின் தனித்தன்மை எனலாம். நம்நாடு அதற்குரிய தனித்தன்மையை இழந்திருக்கிறது. நம் நாடு இழந்த தனித்தன்மையை அது மீண்டும் பெறவேண்டும். அதற்கு நாம் ஆவன செய்ய வேண்டும். பொதுமக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர ஏழை எளியவர்களுடைய உணவுப் பிரச்னை தீரவேண்டும். அனைவருக்கும் நல்ல கல்வி அளிக்கப்பட வேண்டும். புரோகிதர்களுடைய கொடுமையான ஆதிக்கம் அகலவேண்டும். அனைவரும் முன்னேற வாய்ப்பு அளிக்கவேண்டும்.

மக்களிடத்தில் பசிப்பிணி இருக்கும் பொழுது அவர்களுக்கு மதபோதனை செய்தால் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். பசியைப் போக்குவதற்குரிய வழி தெரியாது நாடு இன்றைக்கு நிலைகுலைந்து நிற்கிறது. முதலில் இப்பசிப்பிணியைப் போக்குவோம். வயிற்றுப் பிழைப்பைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பவர்கள் மதபோதனையைக் கேட்கமாட்டார்கள். முதலில் வயிற்றுப் பிழைப்புக்குத் தேவையானவை பூர்த்தி செய்யப்படவேண்டும். அதன்பின் அவர்களுக்கு மதபோதனை செய்யலாம். உணவுக்காக வாடிக்கொண்டிருப்பவர்களிடம் மதபோதனை செய்வதில் பயனில்லை.

சென்ற அரை நூற்றாண்டு காலமாகச் சமூகச் சீர்த்திருத்தம் என்னும் பெயரில் இந்தியாவில் ஒரு பெரிய குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. பத்தாண்டுகளாக நான் இந்தியாவைச் சுற்றிப் பார்த்ததில் நாட்டில் சமூகச் சீர்திருத்தச் சங்கங்கள் நிறைந்திருப்பதைக் கண்டேன். பொதுமக்களுக்காக உழைக்கும் பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களுள் சிலர் சமூகத்தைச் சுரண்டும் நிலையில் இருக்கிறார்கள். இந்தியாவை முன்னேற்றமடையச் செய்ய விரும்பினால் அதன் பாமர மக்களை முன்னேற்ற நாம் பாடுபடவேண்டும். வெறும் அரசியல் கூச்சல் ஒரு பயனையும் தந்து விடாது. இந்தியாவிலுள்ள பாமர மக்கள் சோற்றுக் கவலை இல்லாதவர்களாகவும், கல்வி அறிவு உடையவர்களாகவும் விளங்கினால் அன்றி நாடு முன்னேறாது. நாம் பாமர மக்களின் முன்னேற்றத்தில் அதிகக் கவனம் செலுத்தவேண்டும்.

# எழுமின், விழிமின், இறுதிவரை உழைமின்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1978 ஆம் ஆண்டில் சேலம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

எழுந்திரு, விழித்திரு. சான்றோர்களை அணுகி உண்மையான நெறியை அறிந்து அந்நெறியை உறுதியாகக் கடைப்பிடி. நெறி மிகவும் கடினமானது. க்ஷுரக்கத்தி யின் நுனியில் நடப்பதற்கு நிகரானதாகும். அந்நெறியில் செல்வது மிகவும் கடின மானது என்று சான்றோர்கள் பகர்ந்திருக்கி றார்கள். இக்கருத்துடைய கடோபநிஷதம் வருமாறு:

उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान्निबोधत ।
क्षुरस्य धारा निशिता दुरत्यया दुर्गंपथस्तत् कवयो वदन्ति ॥

உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வராந் நிபோதத
க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா துர்கம் பதஸ்
தத் கவயோ வதந்தி

பரநாட்டம் கொள்வது கடினமானது. ஆனால் மனிதன் பரநாட்டம் கொள்ள முடி யும். முதலில் மனிதனிடத்தில் எத்தகைய ஆற்றல் இருக்கிறது என்பது அவன் செயல் மூலம் வெளிப்படுகிறது. பத்துப்பேர் உறங் கிக்கொண்டிருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். காலையில் எழுந்திருந்து ஒவ் வொருவனும் அவனவனுக்குரிய கருமத்தில் படுகின்றான். ஒருவன் ஓவியம் தீட்டுகின் றான். மற்றொருவன் கவிதை எழுதுகின் றான். மற்றொருவன் நட்னம் புரிகின்றான். ஒவ்வொருவனும் ஒவ்வொரு கருமத்தில் ஈடு படுகின்றான். எக்கருமத்துக்கும் தகுதியற் றவன் என்பவன் உலகத்தில் யாருமில்லை.கரு மத்தைச் செய்யும்பொழுது மனிதன் தன் ஆற்றலை வெளிப்படுத்துகின்றான். சாதா ரண வாழ்க்கை வாழ்ந்து வருபவன் உறங்கு பவனாகின்றான். வாழ்க்கையின் குறிக் கோளைச் சரியாக அறிந்துகொள்பவன் எழுந் திருப்பவனாகின்றான். பிறகு செயலில் ஈடு படுதல் வேண்டும். செயலில் ஈடுபடும் பொழுது அச்செயலை என்ன பாங்கில் செய்ய வேண்டும் என்பதை அறிந்து கொண்டு செய்யவேண்டும். அச்செயலில் உள்ள நிபுணர் ஒருவரைக் கேட்டு அவர் கருத்தறிந்து அச்செயலைச் செய்யவேண்டும். 'ப்ராப்ய வராந் நிபோதத' என்பது விஷய மறிந்த சான்றோரிடமிருந்து உபாயத்தை அறிந்து நீ அவ்வுபாயத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற பொருள் தரும். சுவாமி விவேகானந்தர் அக்கோட்பாட்டை 'நாடிய கருமம் கை கூடும்வரை உழைக்கவேண்டும்' என்று மொழி பெயர்த்தார். ரிஷியின் ஆப்தவாக்கியம் எப்பொழுதும் தத்துவத் துக்கு விளக்கமாக அமைந்திருக்கும். ரிஷி வாக்கு என்பதும் ஆப்த வாக்கியம் என்ப தும் வேத வாக்கு என்பதும் ஒன்றே.

பரத்தை அறிந்திருக்கும் சான்றோர்கள் உண்மையை உள்ளபடி உரைத்திருக்கின்றார் கள். உண்மையைக் கடைப்பிடிக்கும் அள வுக்கு நாம் மேன்மை அடைகின்றோம். நாம் சரியான மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் பொழுது அது சன்மார்க்கம் எனப்படுகிறது. சன்மார்க்கத்தில் செல்லுகின்ற மனிதனுக் குத் தோல்வியில்லை. முறைதவறிப் போன வன் வெற்றியடைந்ததில்லை. ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் தெய்விகம் புதைந்திருக்கிறது. மனிதன் அதை மறந் திருக்கின்றான். உள்ளத்தினுள் இருக்கும் தெய்விகத்தோடு இணக்கம் கொள்வது சரி யான இணக்கம் ஆகிறது. அது யோகம் என்றும் சொல்லப்படுகிறது.யோகமார்க்கத் தைக் கடைப்பிடிக்க மனிதன் எழுந்திருக்க வேண்டும். உலக வாழ்க்கை உறக்கத்துக்கு நிகரானது. பழக்கவழக்கத்தை அடிப்படை யாகக்கொண்டு இயந்திரம் போன்று செயல் களைச் செய்து வருகின்றோம். நம் செயல் களை விமர்சனம் செய்து பார்த்தால் உண்டு உண்டு உறங்குவதைத் தவிர வேறு எப்பல னும் அதில் அமையவில்லை. வாழ்க்கையில் ஆண்டுகள் கழிந்துகொண்டே இருக்கின் றன. காலையிலிருந்து மாலைவரை விலங்கு போன்று உழைக்கின்றோம். வேளாவேளைக்கு உணவு உண்கின்றோம்; உறங்குகின்றோம். ஆனால் முன்னேற்றத்தின் அறிகுறி எதுவும் நம்மிடத்தில் இல்லை. சாதாரணமாக நாம் வாழ்ந்துவருகிற வாழ்க்கையிலிருந்து விழிப் படைந்த வாழ்க்கை என்பது வேறானதாகும்,

நாம் எப்படி எழுந்திருக்கவேண்டும் என்பதை ஆஞ்சனேயன் தன் வாழ்க்கையில் விளக்கிக் காட்டுகின்றான். விழிப்படைந்த நிலையில் அவன் செய்த செயல்கள் மனிதன் எப்படி விழிப்படைய வேண்டுமென்று விளக்குகின்றன.

சீதையைத் தேடுவதற்காக நாலா பக்கங்களிலும் சுக்ரீவன் தன் சேனையை அனுப்புகின்றான். தென்திசைக்கு அனுப்பிய கூட்டத்துக்குச் சுக்ரீவன் அங்கதனைத் தலைவனாக நியமிக்கின்றான். ஜாம்பவான் என்ற முதிர்ந்தோனை அக்கூட்டத்தோடு சேர்த்து அனுப்புகின்றான். ஜாம்பவான் சிறந்த அனுபவசாலியாவான். ஆற்றல் படைத்த ஆஞ்சனேயனைத் தென்திசை நோக்கி அனுப்பி வைத்தான். ராமபிரான் கணையாழியை ஆஞ்சனேயன் கையில்தான் கொடுத்து அனுப்புகிறான். 'காணுதுபோன யானையைச் சொப்பில் தேடிப்பார்' என்பது ஒரு பழமொழி. யானை மிகப் பெரியது. சொப்பு மிகச் சிறியது. சொப்பில் தேடிப்பார் என்பது எல்லாப் பக்கங்களிலும் தேடிப்பார்க்க வேண்டும் என்பதைக் குறிக்கும். எல்லாத் திசைகளுக்கும் ஆட்களை அனுப்பியது எல்லாப் பக்கங்களிலும் தேடிப்பார்க்க வேண்டும் என்ற போக்கிலாகும்.

தென்திசைக்குத் தெள்ளியகூட்டம் அனுப்பப்பட்டது. தெள்ளி எடுத்த கூட்டத்துக்குத் தலை சிறந்தவனாக ஆஞ்சனேயன் இருந்தான். இராமாயணததில்எல்லார்க்கும் உதவி செய்தவன் ஆஞ்சனேயன் ஆவான். ஆனல் அவனுக்கு யாருடைய உதவியும் தேவை இல்லை. அவன் பேராற்றல் படைத்தவனாக இருந்தான். அவன் படைத்திருந்த ஆற்றல் எல்லாரிடத்திலும் இருக்கின்றது. அவ்வாற்றலை மற்றவர்கள் மறந்திருக்கின்றார்கள். மற்றவர்கள் உறங்குகின்ற நிலையில் இருக்கிறார்கள். ஒவ்வொருவரிடமும் உள்ள ஆற்றலைத் தட்டி எழுப்பினல் அரிய பெரிய காரியங்களைச் சாதிக்கலாம். அண்டத்திலுள்ள சக்தி முழுவதும் ஓர் அணுவிலும் இருக்கிறதென்று பௌதிக விஞ்ஞானம் இன்றைக்கு நிரூபித்திருக்கிறது. அச்சக்தி ஆக்க காரியத்துக்கும் பயன்படும்; நாச காரியத்துக்கும் பயன்படும். Atomic energy என்பதை ஆக்க காரியத்துக்கும் பயன்படுத்தி வருகின்றார்கள்; நாசகாரியத்துக்கும் பயன்படுத்தி வருகின்றார்கள்.

மனிதனிடத்து இருக்கின்ற பேராற்றலை மக்களுக்கு நலம் செய்வதற்கும் பயன்படுத்தலாம்; மக்களுக்கு உபத்திரவம் கொடுப்பதற்கும் பயன்படுத்தலாம். மனிதன் தன்னிடத்துள்ள பேராற்றலைப் பயன்படுத்தி ஆன்மீகத்துறையில் பெருநிலைக்கு வரலாம். எல்லாரிடத்தும் இருக்கின்ற பேராற்றலை நன்கு பயன்படுத்துதல் வேண்டும் என்பதை நாடிய கருமம் கைகூடும் வரை உழைமின் என்று சுவாமி விவேகானந்தர் பகர்கின்றார்.

இன்றைக்கு நாட்டில் உழைப்பு மிகவும் குறைவு. மக்களிடையே உழைப்பை வலியுறுத்துவது இக்காலத்துக்குரிய யுகதர்மமாகும். குருவை அடைந்து அவர் சொற்படி தீவிரமாகச் சாதனை செய்வது ஆன்மீக விசாரத்தில் முன்னேறுவதற்குத் துணை புரியும். ஆனல் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதற்கு நேர்மாறாக நடந்து கொண்டார். அம்பிகையினிடத்தில் அவர் பிரார்த்தனை செய்ததாவது: "தாயே! நான் உன்னுடைய மகிமைகளை நூலிலிருந்து அறிந்து கொள்ள மாட்டேன். பிறர் சொல்லக் கேட்டும் அறிந்துகொள்ள மாட்டேன். உன்னுடைய மகிமைகளை நீயே எனக்குப் புகட்டியருளல் வேண்டும்." உலக நடைமுறையில் தாய் குழந்தைக்கு உணவு ஊட்டுகின்றாள். தாயே அக்குழந்தைக்குப் படுக்கை போடுகின்றாள். போர்வையைக் கொண்டு தாயே அதற்குப் போர்த்தி விடுகின்றாள். தாய் செய்யும் காரியம் குழந்தைக்குத் திருப்தியாக இருக்கின்றது. தாய்க்குப் பதிலாக வேறு யாராவது அக்காரியங்களைச் செய்தால் குழந்தைக்கு அதிருப்தி உண்டாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பிகையினுடைய குழந்தையாக இருந்தார். அம்பிகைக்குத் தாம் செல்வன் என்ற உரிமையைக் கொண்டு அம்பிகையோடு போராடுகின்ற முறையில் பிரார்த்தித்தார். அவர் அல்லும் பகலும் உணவு உறக்கமின்றித் தேவியின் காட்சிக்காக உழைத்து வந்தார். இந்த யுகத்தில் அத்

தகைய உழைப்பு நமக்குத் தேவைப்படுகிறது.

இக்காலத்தில் நல்ல குருமார்கள் கிடைப்பது அருமையாக இருக்கின்றது. அதே போன்று சரியான சிஷ்யன் கிடைப்பதும் அரிது. தகுதியற்றவர்கள் குரு ஸ்தானம் வகிக்கின்றார்கள். அரியபெரிய செயல்களைச் செய்வதாகவும் விளம்பரம் செய்கின்றார்கள். பிறகு எல்லாம் வாணவேடிக்கை போன்று விளையாட்டுத்தனமாகப் போய் விடுகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் முற்றிலும் பரத்தைச் சார்ந்திருந்தார். பரத்தைச் சார்ந்திருந்து கடைசி வரை உழைத்தார். அதன் விளைவாக அவர் அம்பிகையின் காட்சியைப் பெற்றார். தம்போன்று பரத்தைச் சார்ந்திருந்து உழைக்கின்ற கூட்டத்தினரைத் தாம் அவர் ஆயத்தப்படுத்தினார். அவர் தம்மைச் சார்ந்திருக்கவேண்டுமென்று ஒரு பொழுதும் கூறவில்லை.

வங்காளத்தில் 'குச் கரோ' என்னும் பழமொழி உண்டு. முயன்றுகொண்டே இரு என்பது அதன்பொருள். பரமஹம்சருடைய உபதேசம் முழுவதும் திரட்டி எடுத்தது இப்பழமொழியாகும். முயலுகின்ற அளவு மனிதன் மேன்மை அடைகின்றான். பிறரைச் சார்ந்திருப்பவன் மேன்மையடைய மாட்டான். பரத்தை அடைவதாக இருந்தாலும் சரி, இகத்தில் எக்காரியத்தைச் சாதிப்பதாக இருந்தாலும் சரி உண்மையான உழைப்புத் தேவைப்படுகிறது. முயலுகின்றவன் தவறிப் போனாலும் மேல் நிலைக்கு வருவான். ஆனால் முயலாதவன் இருந்த நிலையைவிட்டு மேல் நிலைக்கு வரமாட்டான். ஒரு சிலர் அதிகாலையில் எழுந்து தங்கள் கடமைகளைச் செய்வதற்குப் பதிலாகக் கருட்தரிசனத்துக்காக ஒரு மணி நேரம் காத்துக்கொண்டிருப்பார்கள். அவர்கள் சோம்பேறிகளாவார்கள். உழைப்பில் நாட்டம் உடையவனுக்குக் கருட்தரிசனத்துக்கு நேரமில்லை. உழைப்பை உயர்வாகக் கருதிக் கண்ணும் கருத்துமாகக் காரியத்தில் ஈடுபடுகின்றான். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அருள்தாகம் உழைப்பின் அடிப்படையில் அமைந்திருந்தது. அருள் தாகத்தைச் செயலில் காட்டினார். கடைசிவரையில் அவர் தீவிரமாக உழைத்து வந்ததால் காளியின் காட்சியைப் பெற்றார்.

நாடிய கருமம் கைகூடும் வரை உழைமின் என்று விவேகானந்தர் கூறியதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நிரூபித்துக்காட்டியுள்ளார். கடவுள் உண்டா இல்லையா என்ற ஐயம் விவேகானந்தருக்கு ஏற்பட்டது. அவ் ஐயத்தை விஷயம் தெரிந்தவர்களிடம் சென்று நீக்கிக்கொள்ள முயன்றார். 'ப்ராப்யவராந் நிபோதத' என்னும் கோட்பாட்டைச் செயலுக்குக்கொண்டுவரும் முறையில் பெரியவர்கள் எல்லாரையும் அணுகிக்கடவுள் உண்டா இல்லையா என்ற கேள்வியைக் கிளப்பினார். ஆனால் இவருடைய ஐயப்பாட்டை யாராலும் நீக்கிவைக்கமுடியவில்லை. ரவீந்திரநாத் தாகூரின் தந்தை தேவேந்திரநாத் தாகூர் என்பவர் அக்காலத்தில் மகான்களுள் ஒருவராக விளங்கிவந்தார். மக்கள் அவரை மஹரிஷி தேவேந்திரநாத் தாகூர் என்று அழைத்தனர். அவரிடமும் விவேகானந்தர் சென்றார். விவேகானந்தர் சென்றபொழுது அவர் பூஜையை முடித்துவிட்டு ஆழ்ந்த மனநிலையில் இருந்தார். "ஐயன்மீர்! தாங்கள் கடவுளைக் கண்டிருக்கின்றீரா?" என்ற கேள்வியை விவேகானந்தர் அவரைக் கேட்டார். "பிள்ளாய்! நீ பிற்காலத்தில் ஒரு பெரிய யோகியாக விளங்குவாய். அதை நான் இப்பொழுது உன்னிடத்தில் காண்கின்றேன்" என்றார் தேவேந்திரநாத் தாகூர். "நற்சாட்சிப் பத்திரம் வாங்குவதற்கு நான் உங்களிடம் வரவில்லை" என்று வணக்கம் செலுத்திவிட்டு விவேகானந்தர் சென்றுவிட்டார். சான்றோரை வணங்குதல் என்ற பகுதியைக் கடைப்பிடிப்பதில் இன்னும் உறுதியாக இருந்தார். இன்னும் பலரை அணுகிப் பார்த்தார். அவர் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை. அவர் முயற்சியை நிறுத்திவிடவில்லை. தொடர்ந்து முயன்றுகொண்டே இருந்தார். இறுதியில் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்து தம் ஐயப்பாட்டை அகற்றிக்கொண்டார்.

'உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வராந் நிபோதத' என்னும் கோட்பாட்டை ஆஞ்சநேயன் நடைமுறைக்குக் கொண்டுவந்தான்.

சீதா பிராட்டியைத் தேடுவதற்காகத் தென் திசைக்குச் சென்ற கூட்டத்தினர் கடற் கரைக்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் மேற் கொண்டு நடக்க முடியாதவாறு கடல் குறுக்கிட்டது. "இங்கேயே பட்டினி கிடந் தாவது மடிவேன், வந்த காரியத்தில் தோல்வி அடைந்துவிட்டேன் என்று இராம னிடம் போய்ச் சொல்ல மாட்டேன். இங் கேயே உயிர்விடப் போகிறேன்" என் ருன் ஆஞ்சனேயன். அப்பொழுது அனுப வத்தில் முதிர்ந்த ஜாம்பவான் பகர்ந்ததா வது: "ஆஞ்சனேயா! நீ எத்தகைய பேராற் றல் படைத்தவன் என்பது உனக்குத் தெரி யுமா? நீ சிறுவனுக விளையாடிக்கொண்டி ருந்த பொழுது வானத்திலிருந்த சூரிய னைப் பார்த்து விளையாடுவதற்குரிய பந்து என்று எண்ணி அதைத் தாவிப் பிடிக்கச் சென்ருய். இது போன்ற திறமைகள் உன் னிடம் ஏராளம் இருக்கின்றன. இப்பொழுது எடுத்துக்கொண்ட காரியத்தைச் சாதிப்பது உனக்கு எளிய காரியம். உன் ஆற்றலை மறநதுவிட்டு ஒன்றுக்கும் உதவாதவன் போன்று சோர்வடைந்து படுத்துக்கிடக்கின் ருய். சோர்வை உதறித்தள்ளிவிட்டு எழுந்து செயல்படு." இங்ஙனம் கூறி ஆஞ்சனேயனி டத்தில் மறைந்து கிடந்த ஆற்றலை ஜாம்ப வான் ஞாபகமூட்டினுன். ஆஞ்சனேயன் எழுந்திருந்தான். தான் பேராற்றல் படைத் தவன் என்பதை ஞாபகத்துக்குக் கொண்டு வந்தான். மகேந்திர மலையில் நின்று கொண்டு தான் செய்யவேண்டிய காரியத் தைச் சாதித்துவிடலாம் என்ற நம்பிக் கையை வளர்த்தான். விசுவரூபம் எடுத் தான். மனிதனிடத்துள்ள பேராற்றல்தான் விசுவரூபம் எனப்படுகிறது. ஆஞ்சனேய னிடத்தில் ஆற்றல் வடிவெடுத்தது. "ராம காரியத்தைச் செய்து சாதிப்பேன்" என்று ஆழ்ந்து எண்ணினுன் ஆஞ்சனேயன். மேலும் அவ்வெண்ணம் அவனிடம் வீறுகொண்டு எழுந்தது. இலங்கை மட்டுமன்று பிரபஞ்சத் திலுள்ள எல்லா இடங்களிலும் ஊடுருவிப் பாய்ந்துதேடி சீதாபிராட்டி இருக்கும் இடத் தைக் கண்டு பிடிப்பேன் என்று எண்ணி னுன். இலங்கையில் சீதை இருப்பதாகச் செய்தி அனுமானுக்குக் கிடைத்திருந்தது. லங்காபுரிக்குச் சென்று சேரும் வரை வானத்தை விட்டு இறங்குவதில்லை என்று சங்கல்பம் செய்தான். ஆகாய விமானம் போன்று தென்திசை நோக்கிப் பாய்ந் தான். அவன் போக்குக்கு இடைஞ்சல்கள் ஏற்பட்டன. எல்லா இடைஞ்சல்களையும் தன் ஆற்றலைக்கொண்டு தகர்த்தெறிந் தான், அவனுடைய வேகத்தைத் தடை செய்ய அரக்க வடிவம் ஒன்று தோன்றியது. ஆஞ்சனேயனும் அவ்வரக்க வடிவமும் தங்கள் தங்கள் வடிவங்களைப் பெரிதாக்குவ தில் போட்டி போட்டார்கள். உலகத்தையே விழுங்குவது போன்று அரக்க வடிவம் வாய் திறந்தபொழுது ஆஞ்சனேயன் தன்னை அணு மயமாகச் செய்துகொண்டு அவ்வடிவத்தின் வாய்க்குள் நுழைந்து போய்விட்டான். சமயோசிதமாக ஆஞ்சனேயன் ஆங்கு நடந்துகொண்டான். ஆற்றல் படைத்திருக் கின்றவர்களுக்கு, மனம் அமைதி உடைய வர்களுக்கு எடுத்த காரியத்தை முடித்தே ஆகவேண்டும் என்ற தீர்மானம் செய்த வர்களுக்குச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு சமயோ சித புத்தி வருகிறது என்பதை ஆஞ்சனே யன் விளக்கிக் காட்டுகிருன்.

"ஆஞ்சனேயா, எங்களுடன் உட்கார்ந்தி ருந்து சிறிதுநேரம் ஓய்வெடுத்துக்கொள்ள லாம், உணவு அருந்தி சரீரத்தைப் புதுப் பித்துக்கொள்ளலாம்" என்று ஒரு கூட்டத் தினர் கூறினர். "ராம காரியத்துக்காகச் சென்றுகொண்டிருக்கிறேன். நான் அக் காரியத்தை முடிக்கும் வரை ஓய்வெடுத் துக்கொள்ளமாட்டேன்" என்ருன் ஆஞ்ச னேயன். நாடிய கருமம் கைகூடும்வரை உழைமின் என்னும் கோட்பாட்டுக்கு ஆஞ்ச னேயன் விளக்கமாக அமைகின்ருன்.

மனிதன் எப்படி வாழவேண்டுமென்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகின்ருர். குடியானவன் ஒருவன் நிலத்தில் பயிரிட்டிருந்தான். கோடைக்கால மாக இருந்தபடியால் வேண்டிய அளவு நீர் கிடைக்கவில்லை. அவன் நிலத்துக்குப் பக்கத் தில் ஆறு ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. ஆற் றிலிருந்து அவன் நிலத்திற்கு நீர் கொண்டு

வருவதற்கு வாய்க்கால் வெட்டிக்கொண்டிருந்தான். பாதி வேலை முடிந்திருந்தது. உணவு நேரம் வந்துவிட்டது. காரியத்தைத் தொடர்ந்து செய்துகொண்டிருந்தான். குடியானவனுடைய மகள் அவன் இருக்குமிடத்துக்கு வந்து அவனிடம் எண்ணெய் தந்து குளிக்கச் சொன்னாள். "எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்கு இப்போது எனக்கு நேரமில்லை. நீ வீட்டுக்கு ஓடிவிடு ஆற்றிலுள்ள நீரை நிலத்துக்குக்கொண்டு வந்து பாய்ச்சிய பின்புதான் நான் மற்ற வேலைக்கு வருவேன்" என்று கூறினான். மனைவி வந்து அழைத்த பொழுது குடியானவன் கோபித்துக் கொண்டு அவளையும் விரட்டி ஓட்டிவிட்டான். மாலைவரை உழைத்து வாய்க்காலை வெட்டி முடித்தான். ஆற்றுநீர் சலசல வென்று ஓடிவந்து நெற்பயிருக்குப் பாய்ந்தது. அக்குடியானவன் எடுத்துக்கொண்ட காரியத்தை முடித்தான பிறகு மகிழ்ச்சியுடன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பிட அமர்ந்தான்.

ஒவ்வொரு மனிதனும் எடுத்துக்கொண்ட காரியத்தைக் கண்ணும் கருத்துமாக அக்குடியானவன்போன்று செய்து முடிக்கவேண்டும். காரியத்தைக் கருத்தாகச் செய்யாதவனுக்கு விளைவு சரியாக வந்து அமையாது. முயற்சிக்கு ஏற்ற விளைவுதான் கிடைக்கும். ஆத்ம சாதனையில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்கள் அல்லும் பகலும் அயராது முயல்கின்றார்கள். ஏதோ சில குறிப்பிட்ட நாட்களில் சாதனை செய்துவிட்டு மற்ற நாட்களில் சாதனையைப் பற்றி நினைக்காது இருப்பவர்கள் தீவிரமாக முயல்பவர்கள் அல்லர். சரியான மார்க்கத்தை அறிந்துகொண்டு அம் மார்க்கத்தில் வீண்பொழுது போக்காது தீவிரமாகச் செல்பவன்தான் விழித்தவனாகின்றான். எடுத்துக்கொண்ட காரியம் கைகூடும் வரை அயராது உழைக்கவேண்டும். ஆஞ்சனேயன் ஒவ்வொரு படித்தரத்திலும் விழிப்புடன் நடந்துகொள்கின்றான். காரியத்தில் கண்ணும் கருத்துமாக இருப்பவன் சூழ்நிலைகளைச் சமாளிக்க எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதற்குஆஞ்சனேயன் பெரிய எடுத்துக் காட்டாக இருக்கின்றான்.

லங்காதேவி என்ற தெய்வம் இலங்கையைக்காத்து வந்தது. அத்தெய்வத்தின் அனுமதியின்றி யாரும் இலங்கைக்குள் புகுந்துவிட முடியாது. அப்படி யாராவது இலங்கைக்குள் புகுந்துவிட்டால் இலங்கைக்கு அழிவுகாலம் என்று ஜோதிடர்கள் கூறி இருந்தார்கள். ஆஞ்சனேயன் அவளுடைய அனுமதியின்றி இலங்கைக்குள் புகுந்துவிட்டான். ஆஞ்சனேயன் இலங்கைக்குள் புகுந்த போது லங்காதேவி அவனைக் கண்டுபிடித்துவிட்டாள். "நீ எப்படி இலங்கைக்குள் வந்தாய்? யார் உன்னைஇதற்குள் அனுமதித்தார்கள்" என்றுலங்காதேவிஆஞ்சனேயனைக்கேட்டாள். "தேவி, மன்னிப்பாயாக. இலங்கை என்னும் ஊரைப்பார்ப்பதற்காக இவ்வூருக்குள் வந்தேன். இதைப் பார்த்து முடித்தவுடன் திரும்பிப்போய் விடுகிறேன்" என்றான்ஆஞ்சனேயன். லங்காதேவி கோபித்துக்கொண்டு ஆஞ்சனேயனை அடித்து வீழ்த்த வந்தாள். ஆஞ்சனேயன் தற்காப்புக்காக லங்காதேவியைத் திருப்பி அடித்தான். ஆஞ்சனேயன் ஓர் அடி அடித்ததும் லங்காதேவி சுருண்டு விழுந்தாள். லங்காதேவி விழுந்தது இலங்கை அழிவதற்கு முன் அறிகுறியாயிற்று.

இலங்கைக்குள் சென்ற அனுமன் ஒவ்வோர் இடமாகப் பார்த்துக்கொண்டு போனான். இராவணனுடைய மாளிகைக்குள் நுழைந்த பொழுது அவன் தனது மனதுக்குள் எண்ணிக்கொண்டதாவது: "நான் நித்திய பிரம்மச்சாரி. நான் பெண்கள் தூங்குகின்ற இடத்துக்குப் போவதில்லை. ஆனால் என் அன்னை சீதையைத் தேடும்பொருட்டுப் பெண்கள் உறங்கிக்கொண்டிருக்கும் இம் மாளிகைக்குள் நுழைவது குற்றமாகாது." இங்ஙனம் பெண்கள் இருக்கும் சூழ்நிலைக்குப் போகும்பொழுது தன் மனப்பான்மையை ஆஞ்சனேயன் அடியோடு மாற்றிக் கொள்கின்றான். சூழ்நிலைக்கேற்றவாறு இப்படி மனநிலையை மாற்றிக்கொள்பவர்கள் அருமையுடையவர்களாகிறார்கள். இராவணனுடைய மனைவி மண்டோதரி தூங்கிக் கொண்டிருப்பதை ஆஞ்சனேயன் பார்த்தான். மண்டோதரி சீதா பிராட்டியாக

இருப்பாளோ என்று அவன் ஐயப்படுகின்ருன். சீதாதேவி இத்தகைய சுகபோகத்தில் இருக்கமாட்டாள். எனவே இவள் சீதையாக இருக்க முடியாதென்று மண்டோதரியை ஒதுக்கித் தள்ளுகின்ருன். இந்திரஜித்தைப் பார்த்தான். அவனைப் பார்த்ததும் அவன் ஆற்றல் மிகுந்தவன் என்பதை அறிந்துகொள்ளுகின்ருன். இத்தகைய ஆற்றலுடையவனேடு இலட்சுமணன் போரிடுவதற்கு மிகவும் சிரமப்பட்டாகவேண்டும் என்று தீர்மானிக்கின்ருன்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தூங்குகின்றவர்களின் முகத்தை உற்றுப்பார்ப்பார். அப்பொழுது அவர்கள் அகத்திலிருப்பது அவருக்குத் தெரிந்து விடும். ஒவ்வொருவருடைய உள்ளத்துக்கேற்ற சாதனை முறையை விழித்தவுடன் அவருக்கு எடுத்துக்கூறி அம்முறையைப் பின்பற்றச் சொல்வார். ராமகிருஷ்ணர் போன்று ஆஞ்சனேயன் தூங்கிக்கொண்டிருந்த இராவணனைப் பார்த்து மதிப்புப் போட்டான். இவன் சிறப்புக்குரியவன்தான்; காமநோய் மட்டும் இவனிடத்தில் இல்லாவிட்டால் இவனேடு சீர்தூக்குவதற்கு மனிதன் இருக்க முடியாதென்று ஆஞ்சனேயன் நினைக்கின்ருன்.

ஒருவரைப் பார்த்தமாத்திரத்தில் எடை போடுவதில் ஆஞ்சனேயன் தெளிந்தவன் என்பதைக் கிஷ்கிந்தையில் ராம லட்சுமணர்களைப் பார்த்தபொழுது விளக்கிக் காட்டுகின்ருன். இராமனும் இலட்சுமணனும் சீதையைத் தேடிக்கொண்டு கிஷ்கிந்தைக்கு வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் சுக்ரீவனும் அவனேடு சேர்ந்தவர்களும் அஞ்சி ஓடிவிட்டார்கள். ஆஞ்சனேயன் தைரியமாக அவர்களை நின்று பார்த்தான். இராமனையும் இலட்சுமணனையும் பார்த்த ஆஞ்சனேயன் அவர்களைப் பார்த்துக் கேட்டதாவது: “நான் உங்கள் போக்கை நெடுநேரம் கவனித்துப் பார்க்கின்றேன். நீங்கள் முரண்பாடே வடிவெடுத்தவர்களாகக் காணப்படுகிறீர்கள். நீங்கள் யார் என்பதை உள்ளது உள்ளபடி கூறுங்கள்.” “எங்களிடத்தில் நீ என்ன முரண்பாட்டைக் காண்கின்ருய்!” என்று இலட்சுமணன் கேட்கின்ருன். “நீங்கள் தேவர்கள் போன்று தென்படுகின்றீர்கள். ஆனல் உங்களுடைய பாதங்கள் பூமியில் படுகின்றன. நீங்கள் தபசிகள் போன்று தென்படுகின்றீர்கள். ஆனல் உங்கள் கையில் கொடிய ஆயுதங்களைத் தாங்கி இருக்கின்றீர்கள். ஞானிகள் போன்று தென்படுகின்றீர்கள். ஞானிகள் துயரப்படமாட்டார்கள். ஆனல் உங்கள் முகத்தில் சோகக் குறி தென்படுகிறது” என்ருன் ஆஞ்சனேயன்.

அனுமான் இங்ஙனம் கூறியதைக் கேட்ட இராமன் இலட்சுமணனிடம் பகர்ந்ததாவது: “லட்சுமணு! இவன் கற்றவன். இவனுடைய நட்பு நமக்குப் பயன்படும்” என்ருன். உளவு அறிவதில் ஆஞ்சனேயனுடைய தரம் எத்தகையது என்பதை இராமன் அறிந்து கொண்டான். அதன் பிறகு இராமனுக்கும் ஆஞ்சனேயனுக்கும் ஏற்பட்ட உறவு மாருத நிலைத்த உறவாயிற்று. ராம காரியத்திற்கு ஆஞ்சனேயன் உதவியது போன்று வேறு யாரும் உதவவில்லை. ஆஞ்சனேயன் உதவி இல்லாமலிருந்திருந்தால் ராம காரியமும் நிறைவேறியிருக்காது; சுக்ரீவன் விஷயமும் நிறைவேறியிருக்காது; விபீஷணன் காரியமும் நிறைவேறியிருக்காது; சீதாபிராட்டி காரியமும் நிறைவேறியிருக்காது; பரதன் காரியமும் நிறைவேறியிருக்காது. மேற்கூறியவர்கள் அனைவருக்கும் ஆஞ்சனேயன் உதவிபுரிந்தான். ஆனல் ஆஞ்சனேயன் பிரம்மச்சாரியாக இருந்ததாலும் அவனுக்கு உலக ஆசை இல்லாதிருந்ததாலும் அவனுக்கு வேறு யாருடைய உதவியும் தேவையில்லாமலிருந்தது.

ஆற்றல் படைத்தவனுக்கு அறிவு தானுக வருகிறது. உழைமின் என்று விவேகானந்தர் சொல்லுகின்ருர். ஒரு லட்சியத்தை முன்னிட்டு நாம் உண்மையாகப் பாடுபடவேண்டும். அப்படிப் பாடுபடுகிறவர்களுக்குத் தெய்வத்திடமிருந்து உதவி வந்து கொண்டு இருக்கும். இதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஓர் உபமானத்தின் மூலம் விளக்குகின்ருர். ஒருவன் களஞ்சியத்திலுள்ள தானியத்தை அளந்துகொண்டிருந்தால் மற்றொருவன் அதைத் தள்ளிக் கொடுத்துக்

கொண்டே இருப்பார். நம்மிடத்திலுள்ள ஆற்றலை எல்லாம் கரவாது உலகுக்குப் பயன்படுத்திக்கொண்டிருந்தால் புதிய ஆற்றல் தோன்றித் தானாக வந்துகொண்டிருக்கும். இயல்வது கரவேல் என்பது கோட்பாடு. நம்மிடத்துப் பேராற்றல் புதைந்து கிடக்கிறது. அதைப் பயன்படுத்தப் பயன்படுத்த அது வெளிப்பட்டுக்கொண்டே இருக்கும்.

ஒவ்வொருவரும் வாழ்க்கையில் ஒரு லட்சியத்தைக்கொண்டிருக்கிருர்கள். அந்த லட்சியத்தின் பொருட்டு அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு உழைக்கின்ருர்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்களிடத்தில் ஆற்றல் வளர்ந்துகொண்டே வரும். சுவாமி விவேகானந்தர் நாடிய கருமம் கைகூடும்வரை உழைமின் என்று இதைப் பகர்ந்துள்ளார். நாம் காலத்தை வீணுகக் கழிக்கக்கூடாது. நாம் மானுட ஜன்மம் எடுத்திருப்பது காலத்தை வீணுக்குவதற்கன்று. உழைப்பதில் நாம் மந்த நிலையில் இருக்கக்கூடாது. பாடுபடுவதற்கேற்ப நம்மிடம் ஆற்றல் வளர்கிறது. சூழ்நிலைக்கேற்றவாறு ஆற்றல் தானுக ஓங்கி வளர்கிறது. சீதாபிராட்டியை எடுத்துக்கொண்டால் மிதிலாபுரியில் அவள் செல்வியாக வளர்ந்தபொழுது அதற்கேற்ற ஆற்றல் அவளிடம் இருந்தது. ஆருவது வயதில் அவள் இராமனுக்கு மணம் செய்விக்கப்பட்டாள். அவர்களுடைய மணம் தெய்விக அன்பை வளர்ப்பதற்கென்று அமைந்தது. அவர்கள் இருவரும் அயோத்தியில் பன்னிரண்டு ஆண்டுகள் பிரம்மசரிய விரதம் இருந்தார்கள். மிதிலையில் செல்வியாக, அரச குமாரத்தியாக வளர்ந்தவள் அயோத்தியில் நல்ல மாணுக்கியாகப் பயிற்சியில் ஆழ்ந்து ஈடுபடுகிருள். அயோத்தியில் பெற்ற பயிற்சியின் மூலம் அவளுடைய ஆற்றல் பன்மடங்கு வளர்ந்தது. இராமனும் சீதையும் அயோத்தியில் பிரம்மச்சரியம் கடைப்பிடித்துத் தெய்விக அன்பில் ஊறி வளர்ந்தார்கள். திடீரென்று எதிர்பாராத வகையில் இராமன் வனம்போகும்படி நேரிட்டது. அப்பொழுது இராமன் சீதையிடம் பகர்ந்ததாவது: "சீதையே, நீ அயோத்தியிலிருந்து உன் மாமன் மாமிமார்களுக்குப் பணிவிடை செய்துவா. நான் எனக்கமைந்த பதினுன்கு ஆண்டுகள் வனவாசத்தைப் பதினுன்கு நாட்களாகக் கழித்துவிட்டு விரைவில் அயோத்தி வந்து சேர்கிறேன்." சீதை பகர்ந்ததாவது: "நீங்கள் உயிர்; நான் உடல். உயிரை விட்டு உடல் இருக்க முடியாது. உடலைவிட்டு உயிர் பிரிந்திராது. என்னுடைய ஜாதகப்படி நான் வாழ்க்கையின் பெரும் பகுதியை வனத்தில் கழித்தாக வேண்டும். மேலும் நான் வனவாசத்தில் பெருவிருப்பம் வைத்திருக்கிறேன். உங்களுடன் நான் வனத்தில் தங்கியிருந்து பிரம்மச்சரிய விரதம் பூண்டு தவம் புரிவேன்."

மிதிலாபுரியை விட்டு வெளியேறியபொழுது ராஜகுமாரத்தியாகச் சென்ருள். அயோத்தியைவிட்டு வெளியேறியபொழுது தவம்புரிவதற்கேற்ற ஆற்றலோடு விளங்கினுள். வனத்தில் பொய்மான் ஒன்றுக்குச் சீதை ஆசைப்பட்டு இராவணனுல் தூக்கிச் செல்லப்பட்டாள். இலங்கையில் சிறைவைக்கப்பட்டாள். அப்பொழுது அவளுடைய உள்ளத்தில் அருள்தாகம் வளர்ந்தது. அசோக வனத்தில் சிறை இருந்த காலத்தில் அவள் கடும் தவம் செய்தாள். அவளுடைய தவத்துக்கு நிகர் எதுவும் இருக்க முடியாது. அசோகவனத்தில் இருந்தபொழுது அவள் இராமனை நினைந்து உருகினுள். அவள் அப்பொழுது அழுத அழுகைக்குச் சுந்தர காண்டம் என்ற பெயர் வந்தது. அவள் அழுத அழுகையை வால்மீகி மஹரிஷி சுந்தர காண்டம் என்று வர்ணித்துள்ளார். அவள் அழுத அழுகையில் எவ்வளவு அழகு இருந்தது! அவள் அழுகையின் மூலம் அவளுடைய உள்ளத்தில் ஒளி உண்டாயிற்று. வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே என்பது, இறைவனைக் குறித்து அழுதால் அவனை அடையலாம் என்பதைவிளக்குகிறது. அழுது அழுது அண்ணலை அடைந்த அடியார்கள் இருக்கின்ருர்கள். உலகைக் குறித்து உண்டாகும் அழுகை மன அழுக்கின் மூலம் உண்டாவதாகும். அருள்தாகத்தின் மூலம் உண்டாகின்ற அழுகை மனத்தூய்மையின் மூலம் உண்டாவு

தாகும். இதுவரையிலும் புற வடிவத்திலிருந்த இராமன் அசோக வனத்தில் சீதைக்கு ஆத்ம ராமனாக ஆகிவிட்டான். சீதையினுடைய உள்ளத்தில் அருள் உணர்வு ஓங்குவதாயிற்று. அவள் உள்ளம் தெய்வப் பொலிவு உடையதாயிற்று.

ஜீவன் பரமாத்மாவிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ளான். அவன் மீண்டும் பரமாத்மாவோடு லயமடைவதோடு எத்தகைய அருள் தாகம் உடையவனாக இருக்கவேண்டும் என்பதைச் சீதா பிராட்டி விளக்கிக் காட்டுகின்றாள். அருள்தாகம் உடையவன் எத்தகைய கஷ்டங்களிலிருந்தும் மீள முடியும் என்பதைச் சீதையின்அருள்தாகம் விளக்கிக்காட்டுகின்றது. மேலும் அருள்தாகம் உடையவனிடம் காமநோய்அணுகமுடியாது.இதை சீதையினுடைய வாழ்க்கை விளக்குகின்றது.சீதையினுடைய உள்ளம் அருள்தாகம் கொண்டு உயர்ந்த நிலையிலிருந்தகாட்சியை ஆஞ்சனேயன் கண்டான். தவம் என்றால் அதுவன்றோ தவம்! இத்தகைய தவநிலையை யார் ஒருவர் அடைய முடியும் என்று சீதையினுடைய தவநிலையைக் கண்டு ஆஞ்சனேயன் வியப்படைந்தான். இராமனுக்கேற்ற வாழ்க்கைத் துணைவியென்று வடக்குத் திக்கை நோக்கி இராமனை நினைத்து ஆஞ்சனேயன் வணக்கம் செலுத்தினான். இராமன் ஆற்றல் படைத்த ஒரு பெரிய மூர்த்தி. அம்மூர்த்தியின் ஆற்றலுக்கு நிகரான வாழ்க்கைத் துணைவியாகச் சீதாபிராட்டி அமைந்திருக்கின்றாள் என்று நினைந்து அனுமான் வியப்பில் ஆழ்ந்தான்.

(தொடரும்)

---

# இராமன் இச்சை

பண்டரிபுரத்தில் சேணியன் ஒருவன் இருந்தான். அவன் பக்திமான். இராமன் இச்சையால் எல்லாம் நிகழ்கின்றன என்று தன்னை இராமனிடத்தில் ஒப்படைத்திருந்தான். அவன் நூல் வாங்கிச் சாயம் தோய்த்து நெய்து சேலை ஆக்கி அதை விற்பனை செய்வான். சேலைக்கு விலை கூறும்போது இராமன் இச்சைப்படி நூல் கிரயம், சாயக் கூலி, நெய்தல் கூலி, இலாபம் எல்லாம் சேர்ந்து சேலையின் விலை எவ்வளவு ஆகிறதோ அதை விலையாகக் கூறுவான். மக்கள் நம்பிக்கையுடன் அத் தொகையைக் கொடுத்து வாங்கிச் செல்வார்கள்.

பகலில் வியாபாரத்தை முடித்துவிட்டு இரவு உணவுக்குப் பின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து ராம நாமத்தை ஜபித்துக்கொண்டிருப்பான். சில சமயம் இரவு முழுவதும் ராம நாம ஜபத்தில் மூழ்கி விடுவான். ஓர் இரவு அவன் ராம நாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தபோது அவன் வீட்டுப்பக்கமாகக் கொள்ளைக் கூட்டத்தினர் வந்தனர். தாங்கள் கொள்ளையடித்த பொருளைச் சுமப்பதற்குப் பொருத்தமான ஆள் அகப்பட்டான் என்று சேணியனைத் தங்களோடு இழுத்துக் கொண்டு போனார்கள். அன்று இரவு கொள்ளையடித்த பொருள்களையெல்லாம் மூட்டையாகக் கட்டிச் சேணியன் தலைமீது வைத்தார்கள். அச்சமயம் அவர்கள் எதிர்பாராத வகையில் போலீஸ்காரர்கள் வந்தனர். போலீஸ்காரர்களைக் கண்டதும் சேணியனை விட்டுவிட்டுத் திருடர்கள் ஓட்டம் பிடித்தனர். சேணியன் தலைமீது இருந்த கொள்ளையடித்த பொருள்களைப் பார்த்த போலீஸ்காரர்கள் அவனைப் பிடித்துக்கொண்டுபோய் இரவு முழுவதும் காவலில் வைத்தனர்.

மறுநாள் காலை அவனை நீதிபதி முன் கொண்டுபோய் நிறுத்தினர். நீதிபதி சேணியனுடைய வாக்குமூலத்தைக் கேட்டபோது அவன் பகர்ந்ததாவது: "நீதிபதியவர்களே! நான் வழக்கம்போன்று நேற்றிரவு வீட்டுத் திண்ணையில் அமர்ந்து ராம நாமத்தை ஜபித்துக்கொண்டு இருந்தேன். இராமன் இச்சைப்படி அங்குக் கொள்ளைக் கூட்டத்தினர் வந்தனர். இராமன் இச்சைப்படி அவர்கள் என்னை இழுத்துக்கொண்டு போனார்கள். இராமன் இச்சைப்படி அவர்கள் கொள்ளையடித்த பொருள்களையெல்லாம் மூட்டைகட்டி என் தலைமீது வைத்தார்கள். இராமன் இச்சைப்படி போலீஸ்காரர்கள் அங்கு வந்தனர். இராமன் இச்சைப்படி திருடர்கள் ஓடிவிட்டனர். இராமன் இச்சைப்படி போலீஸ்காரர்கள் என்னை இரவு முழுவதும் காவலில் வைத்தனர். இராமன் இச்சைப்படி உங்கள் முன் இப்பொழுது என்னைக்கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறார்கள்."

நீதிபதி அவனிடம் இருந்த நேர்மையையும், ராம பக்தியையும் பார்த்து அவனை உடனே விடுதலை செய்தார். "இராமன் இச்சையால் விடுவிக்கப்பட்டேன்" என்று கூறிக்கொண்டே சேணியன் வீடுபோய்ச் சேர்ந்தான். சேணியன் போன்று இறைவனிடம் சரணாகதி அடைகின்றவர்கள்தாம் உண்மையான பக்தர்கள்.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-173

*958.* धर्मिणी தாமிணீ — தர்மமே வடிவெடுத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிரபஞ்ச நடைமுறைக்கு ஆதாரமாயிருப்பது தர்மம். அக்னியில் உஷ்ணம் இருப்பது போன்று அன்னை பராசக்தியிடம் தர்மம் மிளிர்ந்துகொண்டிருக்கிறது. பிரபஞ்சம் முழுதும் அன்னையின் புறத்தோற்றம் ஆதலால் அதில் அமைந்திருக்கும் அனைத்தும் தர்மத்துக்கு விளக்கமாக இலங்குகின்றன. ஜடப்பொருளிடத்தும் அது அதற்கு ஏற்ற தர்மம் அமைந்திருக்கிறது. நீரின் தர்மம் நனைப்பது. நெருப்பின் தர்மம் தகிப்பது. காற்றின் தர்மம் உலர்த்துவது. இங்ஙனம் ஒவ்வொரு பொருளும் அதன் தர்மத்தை முறையாக நிறைவேற்றுவதால் பிரபஞ்ச நடைமுறை ஒழுங்காக நிகழ்ந்து வருகிறது. உயிர்களின் தர்மம் தங்களுக்கு அமைந்துள்ள வாழ்க்கையை நன்கு நடாத்துதலேயாம். உயிர்களுள் சிறப்புற்றிருப்பவன் மனிதன். மனிதனுக்கு அமைந்திருக்கும் தர்மத்தைச் சுலபமானது என்றும் பகரலாம்; மிகக் கடினமானது என்றும் பகரலாம். மாணாக்கன் ஒருவனுடைய தர்மம் கல்வி கற்பது.ஆசிரியன் ஒருவனுடைய தர்மம் பாடம் புகட்டுவது. இந்நிலைமையில் மனிதனுடைய தர்மத்தை மிக எளிதில் அறிந்துகொள்ளுகிறோம். இனி, கஷ்டமான பகுதிக்குச் சான்று எடுத்துக்கொள்வோம். தர்மத்துக்கு இருப்பிடமாக மிளிர்ந்தவர் பீஷ்மர். ஆனால் பீஷ்மருடைய வாழ்க்கையில் முரண்பாடுகளை ஏராளமாகக் காண்கிறோம். ஒரு சூழ்நிலையில் தாய்தந்தையர் சொற்படி நடந்துகொள்கிறார். மற்றொரு சூழ்நிலையில் அவர்களுடைய ஆணைக்குப் பீஷ்மர் உட்படுவதில்லை. கெட்டவனாகிய துரியோதனனுக்குச் சேனாபதியாக இருந்து பாண்டவர்கள் பக்கம் இருந்த நல்லவர்கள் பலரை அவர் கொன்று மாய்த்தார். ஆயினும் அவர் தர்மத்தைவிட்டுப் பிசகாதவர். எனவே, ஆன்றோர்கள் அவரைப் பாராட்டுகின்றனர். ஆக, தர்மமயமாய் இருக்கிற பராசக்தியின் மகிமை ஒரு சிறுவன் மூலமாகவும் மிளிர்கிறது. பீஷ்மர் போன்ற அறிந்துகொள்ளுதற்கு மிகக்கடினமாக இருக்கும் மூர்த்தியின் வாயிலாகவும் மிளிர்கிறது.

ஆத்மசாதகன் தனக்குற்ற தர்மத்தை அறிந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான். அதன் பொருட்டு அவன் அன்னையின் அருளைச் சார்ந்திருப்பதே முறையாம்.

இனி, அன்னை பராசக்தி தர்மிணியாயிருப்பதன் வாயிலாகத் தன்னுடைய பேரியல்பைச் சதா விளக்கிக்கொண்டே இருக்கிறாள்.

*959.* धर्मवर्धिनी தர்மவர்திநீ— தர்மத்தை வளர்ப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பக்தர்களுடைய உள்ளத்திலே அவள் பேரன்பை ஊட்டுகிறாள். உயிர்கள் அனைத்தும் அவ்வவற்றுக்குரிய தூய்மையினின்று பிசகாதிருக்கும்படி காப்பாற்றி வருகிறாள். மாந்தர்க்கிடையில் நல்லொழுக்கத்தையும் நல்ல இயல்பையும் அன்னை பராசக்தி ஊட்டி வருகின்றாள். அன்னையை வழுத்துதற்கு ஏற்ப பக்தர்களுடைய உள்ளத்திலே பேரன்பை மேலும் மேலும் அவள் வளர்த்து வருகின்றாள். மேலும் ஆத்ம சாதகர்களிடம் அடக்கம், ஒழுக்கம் முதலிய தெய்விக சம்பத்துக்கள் விருத்தி அடையும்படி செய்கின்றாள்.

*960.* लोकातीता லோகாதீதா — உலகங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஜீவர்கள் வசித்துவரும் பிரதேசத்தின் பகுதிகளுக்கு உலகங்கள் என்று பெயர். பாதாளலோகம், பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கம்—இங்ஙனம் உயிர் வகைகளின் வாழ்க்கை ஸ்தானங்கள் பாகுபடுத்தப்படுகின்றன. பூலோகமாகிய இந்த மண்ணுலகிலேயே ஒருவிதத்தில் இந்த உலகங்களின் பாங்குகளைக் காணலாம். புழு, பூச்சி போன்ற சிற்றுயிர்கள் வாழ்ந்துவரும் பகுதியை நரகம் என்றோ, பாதாளம் என்றோ நாம் பொருள்படுத்தலாம். ஆயினும் அக்கீழ் நிலையில் வாழ்ந்துவரும் உயிர் வகைகளும்

அங்குத் தங்கள் இயல்புகளுக்கேற்றவாறு இன்புற்றிருக்கின்றன. இனி, இந்த மண்ணுலகில் நீந்துவன, நடப்பன, பறப்பன ஆகிய உயிர்வகைகள் இருக்கின்றன. அவை யாவும் தங்கள் போக்கில் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன என்பது வெளிப்படை. இனி, இந்த மண்ணுலகில் வாழ்ந்திருக்கும் உயிர்களுள் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் மக்கள். நிலவுலக வாழ்க்கையை மேம்படச் செய்வதில் அவர்கள் சர்வகாலமும் முயன்று வருகின்றார்கள். இதற்கு மேல் உள்ள விண்ணுலக வாழ்வு என்பது நம் கற்பனையாக அமைந்திருக்கின்றது. மண்ணுலகில் இருந்தபடி மேன்மையுற்று வாழ்கின்றவர்களை விண்ணுலகத்தவர் என்று இயம்புதலில் இழுக்கு ஏதுமில்லை. ஆகவே, எல்லாப் படித்தரங்களிலும் இருக்கும் ஜீவகோடிகளின் வெவ்வேறு வகைப்பட்ட வாசஸ்தலங்களை உலகங்கள் என்று இயம்புகிறோம். அன்னை பராசக்தியோ தன்னுடைய இம்மியளவான சொரூபத்தின் வாயிலாக இவை யாவற்றிலும் வியாபித்திருப்பது மட்டுமின்றி இவை யாவற்றையும் கடந்தும் இருக்கின்றாள். முக்குணமயமாயிருக்கும் உலகங்களில் ஜீவர்கள் வசித்து வருகிறார்கள். அன்னை பராசக்தியோ தன்னுடைய பேரியல்பில் குணாதீதமாக அமைந்துள்ளாள். ஆதலால், உலகங்கள் அனைத்துக்கும் அப்பாலுள்ள கைலாயத்தில் வீற்றிருப்பவள் அம்பிகையாம். சுருங்கச் சொல்லுமிடத்து ஜீவகோடிகள் அனைத்தின் வாசஸ்தலங்களாகவும் அவைகளுக்கெல்லாம் அப்பாலுள்ள பாரமார்த்திகப் பெருநிலையில் திளைத்திருப்பவளும் அம்பிகையேயாம். ஆக, இப்பதம் ஆத்ம சாதகர்களுடைய தியானத்துக்கு முற்றிலும் பொருத்தமானதாம்.

*961.* गुणातीता குணாதீதா — குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

குணங்கள் மூன்று ஆகும். அவைகள் முறையே சத்துவம், ரஜஸ், தமஸ் என்று பகரப்படுகின்றன. இந்த முக்குணமயமாயிருப்பது பிரபஞ்சம். இதில் வசித்து வரும் ஜீவர்களும் முக்குணத்தில் கட்டுண்டவர்களாயிருக்கிறார்கள். அப்படிக் கட்டுண்டு கிடப்பதாலேயே அவர்கள் ஜீவர்கள் என்று இயம்பப்படுகின்றனர். அன்னை பராசக்தியோ முக்குண மயமாகவும் மூன்று குணங்களுக்கு அப்பாற்பட்டவளாகவும் ஏககாலத்தில் அமைந்துள்ளாள். இது எப்படிச் சாத்தியம் என்னும் ஐயம் மாந்தர் உள்ளத்தில் எழுவது இயல்பு. அந்த ஐயத்தை ஓர் உபமானத்தின் மூலமாக அகற்றலாம். பரந்த கடலின் மேல்பகுதி அலைவீசி உருண்டோடிக் கொண்டிருக்கிறது. மற்று, அதன் கீழ்ப் பகுதியோ அசைவற்று இருக்கிறது. எனவே கடலைத் திரைகடல் எனவும் திரைகளுக்கு அப்பாற்பட்டது எனவும் விளக்குதலில் இழுக்கு ஏதுமில்லை. அதே பாங்கில் அன்னை பராசக்தி தன் சொரூபத்தின் இம்மியளவு பகுதியில் முக்குணமயமான பிரபஞ்சமாகவும் அளப்பரிய தன் சொரூபமாகக் குணாதீதத்திலும் அமைந்திருக்கிறாள்.

குணங்களில் கட்டுண்டு கிடக்கும் ஜீவர்கள் பலதரப்பட்டவர்களாக அமைந்திருக்கிறார்கள். தமோ குணத்தில் இருப்பவர்கள் கீழோர். ரஜோ குணத்தில் இருப்பவர்கள் இடைத்தரமானவர்கள். சத்துவ குணத்திலிருப்பவர்கள் மேலோர். இவர்கள் அடுத்த படியாகக் குணாதீதத்தை அடைவது வாழ்க்கையின் குறிக்கோளாகும். எனவே நல்ல ஆத்ம சாதகர்கள் குண அதீதர்கள் ஆதற்பொருட்டுக் குண அதீதமயமாய் உள்ள அம்பிகையைப் போற்றுவது பொருந்தும்.

*962.* सर्वातीता ஸர்வாதீதா — யாவையும் கடந்தவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அனைத்துமாய் உயிர்கள் யாவுமாய் இலங்குவது பிரபஞ்சம். இந்திரியங்கள் வாயிலாகவும் நுண்ணறிவின் வாயிலாகவும் கற்பனையின் வாயிலாகவும் மனிதனுக்கு எட்டுபவை யாவும் பிரபஞ்சத்தில் அடங்கியிருக்கின்றன. இவைகள் அனைத்திலும் கற்பனையுலகம் ஓர் அலாதியான சிறப்பு வாய்க்கப்பெற்றது. அறிவுத்திறமை வாய்ந்த மானுடர் பலர் இருக்கின்றனர். அன்னவர்கள் அவரவர் ஆராய்ச்சித்துறைகளில் கற்பனையை வளர்த்துக்

கொண்டே போகிறார்கள். அதன் விளைவாகப் புதிய நூல்களும் பல வெளி வந்து கொண்டிருக்கின்றன. அப்படி வருபவைகள் அண்டம், பகிரண்டம், ஜீவகோடிகள், அவைகளின் செயல்கள் ஆகியவைகளைப் பற்றியவைகளாம். இவை யாவும் மனிதனுடைய மனோ விகாரங்களேயாம். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் மனோ விகாரங்களாம். அதற்குச் சான்று எடுத்துக் கொண்டால் எத்தனையெத்தனை கருத்துக்கள், இயற்கைப் பொருள்கள், செயற்கைப் பொருள்கள் ஆகியவைகள் இருக்கின்றனவோ அவை யாவும் மனிதனுடைய மனதின் விகாரங்களாம். அயர்ந்த உறக்கத்தில் இவையாவும் ஒடுங்கிய மனதில் ஒடுங்கி விடுகின்றன.

கற்பனையாகிய உலகு அனைத்துக்கும் அப்பாலிருக்கின்ற அன்னை பராசக்தியோ மனிதனுடைய மனோ விகாரங்களைக் கடந்தவளாம். அவள் யாண்டும் தன்மயமாய் இருக்கிறாள். நுண்ணறிவாளனுடைய கற்பனைக்கும் அப்பாற்பட்டவள். அவளுடைய சொரூபத்தைக் கிரஹிக்க மானுட அறிவுக்கு இயலாது. ஐம்பொறிகளுக்கு எட்டுபவை அனைத்தும் பிரபஞ்சத்தின் கூறுகளாம். பின்பு அன்னை பராசக்தியோ பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவள். நாம் கண்கொண்டு பிரபஞ்சத்தைப் பார்க்கிறோம். ஆனால் நம் கண்ணைக்காண நம் கண் உதவாது. அதே விதத்தில் அன்னை பராசக்தி அனைத்துக்கும் ஆதாரமாகவும் அனைத்தையும் காண்பவளாகவும் இருக்கிறாள். அப்படி இருக்கும் காண்பவளாகிய அவளைக் காணப்படு பொருள்கள் எட்டவோ, அறியவோ மாட்டா. ஆத்ம சாதகன் ஒருவனுக்கு அந்தக்கரண சுத்தி அமைவதற்கு ஏற்ப இத்தத்துவம் ஒருவாறு விளங்குகிறது. ஆனால் முற்றிலும் அவளை அறிந்து கொள்ளுதல் எந்த ஞானிக்கும் சாத்தியமன்று. கடலை ஆழம் பார்க்கச்சென்ற உப்புப் பொம்மை கடலுக்குள்ளேயே லயமாகிறது. அதன் பிறகு கடலை ஆழம் பார்க்கும் கேள்வியை எழுப்புதற்குக் கூட உப்புப் பொம்மை என்ற அந்த வியக்திக்குச் சாத்தியப்படாது. பேரறிஞர்களாயிருக்கின்ற ஜீவர்கள் அந்த உப்புப் பொம்மையின் நிலையில் இருக்கிறார்கள். ஆதலால் அன்னை பராசக்தி யாராலும் அறிந்து கொள்ளமாட்டாதவளாக, அனைத்துக்கும் அப்பாற்பட்டவளாக இருக்கின்றாள்.

963. शमात्मिका சமாத்மிகா— யாண்டும் தன்மயமாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அனைத்தும் என்று சொல்லப்படுகிற பிரபஞ்சத்திலுள்ள யாவும் ஆதேயமாம். அவை யாவற்றுக்கும் ஆதாரமாயிருப்பவள் அன்னை பராசக்தி. அப்படி ஆதாரமாயிருக்கும் அவள் தன் நிஜ சொரூபத்தினின்று இம்மியளவும் பிசகுவதில்லை. சாந்தமும் இனிமையும் ஆனந்தமும் அவளுடைய கூறுகளாம். அத்தகைய நிஜசொரூபத்தினின்று எக்காரணத்தை முன்னிட்டும் அவள் பிசகுவதில்லை. ஒரு சான்றின் மூலம் இதை விளக்கலாம். சினிமாத் திரைப்படக் காட்சியில் ஆதாரமாயிருப்பது திரை. ஆதேயமாய் அத்திரையின் மீது ஏற்படும் விகாரங்கள் யாவும் திரையை முன்னிட்டே ஒருமைப்பாடும் ஒழுங்குப்பாடும் பெறுகின்றன. தீப்பற்றி எரிவதுபோன்று படக்காட்சி தென்படுகின்றது. அதை முன்னிட்டுத் திரை தீய்ந்துபோவதில்லை. திரை இருப்பதாலேயே அதன் மீது தீப்பற்றி எரியும் காட்சி தென்படுகிறது. அதே பாங்கில் யாண்டும் தன்மயமாயிருக்கும் அன்னை பராசக்தியின் உறுதிப்பாட்டின் மீது உலகங்கள் யாவும் தோன்றி, இருந்து, ஒடுங்குகின்றன. இதில் மற்றொரு விசேஷம் தோற்றத்துக்கு வந்துள்ள உயிர்வகைகள் அன்னையின் பாங்குகளாகிய ஆனந்தம், அமைதி, இன்பம் ஆகியவைகளை நாடுதற்கேற்ப மேன்மையடைகின்றன. அன்னையின் பாங்கை மறந்துவிட்டுப் பிரகிருதியின் கூறுகளில் கட்டுண்டவைகளாகத் தங்களை வைத்துக் கொள்ளுதற்கேற்பத் துன்புற்று அலைகின்றன. எனவே, ஜீவகோடிகள் அனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் சமாத்மிகாவாகிய அன்னையைச் சார்ந்திருப்பதே குறிக்கோளாம்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (338)** *" ராமா, என்னைச் சத்திய சங்கல்பன் ஆக்குதற் பொருட்டு நீ கான கம் ஏகத் தீர்மானித்திருக்கிறாய். உன் செயலைத் தடுப்பது எனக்குத் தகாது. ஆயினும் ஒரு வேண்டுகோள். எனக்கு அந்தியகாலம் அணுகிவிட்டது. நீ இப்பொழுதே புறப்பட்டுப் போகவேண்டாம். இன்று இரவுமட்டும் இங்கே என்னுடன் தங்கி இரு. கடைசியாக நான் உன்னை மனமாரப் பார்த்து மகிழவேண்டும். அது ஒன்றே என் கடைசி அவா. நாளை அதி காலையில் நீ புறப்பட்டுப் போகலாம்" என்று தந்தை தசரதர் வேண்டினார். மைந்தனோ, 'பிரிவினால் வரும் ஏமாற்றத்தை ஒத்திவைப்பதால் நீக்கமுடியாது. ஆதலால் நான் இப்பொழுதே புறப்பட்டுப் போகிறேன்' என்று சொல்லிவிட்டு இராமன் வாகனத்தில் ஏறினான். அதை ஓட்ட வேண்டாம் என்று தசரதனும் பொதுமக்களும் வேண்டினார்கள். 'ஓட்டு, ஓட்டு' என்று தேரோட்டியாகிய சுமந்திரனை இராமன் ஏவினான். அனைவருக்கும் ஏமாற்றத்தை உண்டுபண்ணும்படி இராமன் அயோத்தியிலிருந்து புறப்பட்டுப்போய் மறைந்தான். இராமன் இப்படிச் செய்தது நியாயமா?*

ஸ்ரீ ராமன் புத்ரோத்தமன். தாய் தந்தையரைத் திருப்திப்படுத்துவதும் அவர்களுக்கு நலனை உண்டுபண்ணுவதும் அவனுடைய குறிக்கோள்களாக இருந்துவந்தன.

பெற்றோர் சாகப்போகும் தறுவாயில் மைந்தர் எவ்விதத்திலாவது அவர்கள் அருகிலிருக்க முயலுவது முறை. சாகும் தறுவாயில் இருப்பவருடைய ஆசையை நிறைவேற்றி வைப்பது சத்புத்திரன் ஒருவனுடைய கட்மையாகும். ஸ்ரீராமனோ இந்த இரண்டு செயல்களினின்றும் மாறுபட்டவனாக நடந்துகொண்டான். அவன் செய்தது பிழை என்றே பெரும்பாலோர்க்குத் தென்படுகிறது.

அவன் செய்தது பிழையா அல்லது பொருத்தமானதா என்பதை ஆராய்ந்து பார்ப்போம். ஸ்ரீ ராமன் புத்ரோத்தமன். எந்தத் தந்தையாவது அவனுக்கு நிகரான மைந்தனைக் காண்பது அரிதிலும் அரிதாம். இனி, இராமன் தர்ம கோப்தா, தர்மத்தைக் காப்பதற்கென்றே இந்நிலவுலகில் அவதரித்தவன்.

தன் தந்தைக்கு அந்தியகாலம் அணுகிவிட்டது என்பதை இராமன் நன்கு அறிந்திருந்தான். தன் தந்தை சொன்ன சொற்படி நடந்துகொண்டார் என்பதை நிரூபிப்பது மைந்தனாகிய இராமனுடைய கடமையாக இருந்தது. அவன் அயோத்தியிலிருக்கின்ற பொழுது தந்தை மடிந்துபட்டுப்போனால் அவர் சொன்னபடி நடந்துகொள்ளவில்லை என்னும் குற்றம் அவரை வந்து சாரும். சொன்ன சொல்லை நிறைவேற்ற முடியாது மனம் உடைந்து மாண்டுபோனார் என்னும் குற்றமும் அவரை வந்து சாரும். ஆகவே, தந்தையைத் திருப்திப்படுத்துதல் பொருட்டுத் தான் அயோத்தியில் மேலும் காலதாமதம் பண்ணிக் கொண்டிருப்பது தனக்குப் பொருந்தாது. அத்தகைய பழிக்கு ஆள் ஆக இராமன் விரும்பவில்லை. எனவே, தந்தைக்குப் பெரிய ஏமாற்றத்தை உண்டுபண்ணிய குற்றத்தைத் தன்னுடையதாக ஏற்றுக்கொண்டு அக்கணமே அவன் அயோத்தியை விட்டு வெளியேகினான். சில நெருக்கடிகளில் மாந்தர்க்குச் சங்கடம் ஏற்படுகிறது. எதைச் செய்வது, எதைத் தவிர்ப்பது என்பதைத் தெரிந்துகொள்ளாது பலர் தயங்குகின்றனர். ஸ்ரீ ராமனோ புருஷோத்தமன். நெருக்கடி ஒன்று வந்து நேருமிடத்துப் பெரும்பிழையினின்று தன்னை விடுவித்தல் பொருட்டுச் சிறு பிழை ஒன்றை மானுடன் செய்வது தர்மத்தோடு முரண்படாது. இச்செயலை இராமன் இந்த நெருக்கடியில் தானே செய்து காட்டி இருக்கிறான்.

சாகும் தறுவாயில் இருப்பவர்களுடைய ஆசையை நிறைவேற்றி வைப்பது சத்புத்திரன் ஒருவனுடைய கடமையாகும். ஸ்ரீ ராமன் நடந்து கொண்டது அதற்கு நேர்மாறானது. சில வேளைகளில் சாகும் தறுவாயில் இருப்பவருடைய ஆசையை

நிறைவேற்றி வைப்பதற்கு மாறுகப் பெரிய ஏமாற்றத்தையும் அதன் விளைவாக வருகின்ற துன்பத்தையும் விளைவிப்பது சத்கர்மமாகிறது. இது Shock treatment—ஏமாற்றத்தின் வாயிலாகப் பெரு நலனை உண்டுபண்ணுவதாகும். இந்த முறையைத் தர்ம கோப்தாவாகிய இராமன் தன் தந்தையின் விஷயத்தில் கையாண்டிருக்கிறுன். தசரதச்சக்கரவர்த்தி திருப்தியுடன் உடலை விட்டுநீங்குதற்கு மாறுக ஆழ்ந்து ராம சிந்தனையில் மூழ்கிக்கிடந்தார். இராமனைக் குறித்து வருந்திஞர். அத்தகைய பேறு எல்லார்க்கும் வாய்க்காது. ஸ்ரீ ராமன் தன் தந்தைக்கு மைந்தனுய் இருந்தது முக்கியமானதன்று, அவன் பரமாத்ம சொரூபம். மக்களை உய்விக்க உலகத்திற்கு வந்தவன். அவனுடைய நாமம் உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்தும். அவனுடைய ஆத்ம சொரூபம் அந்திய காலத்தில் சிந்திப்பவருடைய ஜீவ வியக்தியை அகற்றிப் பரத்தில் ஒன்றுபடுத்த வல்லது. தசரதன் பட்ட வியாகுலம் இராமனைப் பற்றியது. ஆகையிஞல் அது பரநாட்டத்துக்கு நிகராகிறது. தம் மைந்தன் என்று அவர் மனதில் எண்ணியது அவர் செய்த தவத்தின் விளைவு. உண்மையில் பரமாத்ம சிந்தனையில் ஆழ்ந்து மூழ்கியிருக்கும் பெரிய வாய்ப்பிஞல் அந்தச் சக்கரவர்த்திக்குத் தம் திருக்குமாரன் வாயிலாகப் பரத்தில் லயமாதல் என்னும் பெரிய பேறு வந்தமைந்தது.

எனவே, அறநெறியினின்று இம்மியளவும் பிசகாத இராமன் தன் தந்தையின் விஷயத்திலும் அறநெறி பிசகாது நடந்து கொண்டான். கல்நெஞ்சம் படைத்தவன் போன்று தன் தந்தையின் இறுதிக் காலத்தில் இராமன் காட்சி கொடுத்தான். உண்மையில் அவன் கருணைகரனே.

**கேள்வி: (339) குடிப்பது போன்ற பழக்கம் இறைவனின் படைப்புத் தானே? ஏன் அது புறக்கணிக்கப்படவேண்டும்?**

இறைவனுடைய படைப்பில் இரண்டு விதப் பாங்குகள் இருக்கின்றன. உயிர்களை உய்விக்கும் பாங்கு நலன் எனவும் உயிர்களைப் பாழ்படுத்தும் பாங்கு தீங்கு எனவும் பாகுபடுத்தப்படுகின்றன. தீங்கு போன்று தென்படும் ஒரு செயல் அதற்குப் பொருத்தமான சூழ்நிலையில் நலனுக வந்தமைகிறது. எனவே, இறைவனுடைய சிருஷ்டியில் அமைந்துள்ள செயல்களில் முற்றிலும் கெட்டது என்றே முற்றிலும் நலன் என்றே எதையும் பாகுபடுத்த முடியாது. நலனையும் கேட்டையும் சரியாகப் பாகுபடுத்துதற்கு அளவையாக மற்ெருரு கூறு அமைந்திருக்கிறது. சுயநலத்தைப் புறக்கணிக்கும் செயல்கள் எல்லாம் நலன் தரும் செயல்கள் என்றும் சுயநலத்தை வளர்க்கும் செயல்கள் யாவும் கேடுடையவை எனவும் வைத்துக் கொள்வது முற்றிலும் அவசியம். வெறியை உண்டுபண்ணும் கள்குடி தன்னளவில் கெட்டது. மிகைபடக் குடிக்கிறவன் மனத்தடுமாற்றம் அடைகின்றுன்; விவேகத்தை இழக்கிறுன். குடித்துப் பழகியவனுக்கு அதை ஒதுக்கிவைக்க இயலுவதில்லை. ஆகையினுல் கள்குடி என்னும் கெட்ட செயலுக்கு அவன் அடிமைப்படுகின்றுன்; அறிவை இழக்கின்றுன். தனக்குத்தானே கேட்டைத் தேடிக் கொள்கின்றுன். ஆதலால் குடிக்கும் பழக்கத்தைக் கெட்டதாக வைத்து அதை நிராகரித்தல் அவசியம். ஆனுல் சில வேளைகளில் அளவாக அளந்தெடுத்துப் பண்ணும் மதுபானம் மனிதனுக்கு உற்சாகத்தை ஊட்டுகிறது. சரீரத்துக்குண்டான ஆயாசத்தை நீக்குகிறது. அதன் பொருட்டு ஔஷதம் போன்று ஒரு சிலர் மதுபானத்தைப் பயன்படுத்தலாம். குளிர் பிரதேசத்தில் வசிப்பவர்களுக்கு மதுபானம் ஒரு போக்கில் நலனைத் தருகிறது. அவர்களுடைய கொள்கை We drink but we don't get drunk-நாங்கள் மதுபானத்தை மருந்துக்கு நிகராக ஏற்கிறேம். ஆயினும் நாங்கள் மிகைபடக் குடித்து மயக்கத்துக்கு ஆளாவதில்லை என்பதாம். அவர்கள் செய்யும் முறையில் மதுபானம் பண்ணுவது பிழையாகாது. ஆயினும் மருந்து எங்ஙனம் ஆரோக்கியமாய் இருப்பவர்களுக்குத் தேவை இல்லையோ அதே விதத்தில் மதுபானமும் மக்கள் எல்லார்க்கும் தேவையாக மாட்டாது. அதைத் தவிர்ப்பதே சாலச் சிறந்தது.

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

**அத்தியாயம் 1**

பராசரரின் மகனாகிய மஹரிஷி கிருஷ்ண துவைபாயன வியாசர் பதினெட்டுப் புராணங்களை இயற்றினார். அவர் கற்று அறியாத சாஸ்திரம் இல்லை. வேதங்களை எல்லாம் வகைப்படுத்தி நான்காகப் பிரித்து நான்கு சீடர்களிடம் அவற்றை ஒப்படைத்தார். இவ்வளவுக்குப் பிறகும் அவருக்குத் திருப்தி, மன அமைதி உண்டாகவில்லை. அவர் வாட்டமுற்று இருந்தார். அப்போது தேவரிஷியாகிய நாரதர் அவரிடம் வந்தார். 'கடவுளின் மகிமைகளை, லீலைகளை, விபூதிகளை மட்டுமே பாடும்' என்று சொன்னார். நாரதர் சொன்னபடியே பகவான் வியாசர் பாகவதம் என்கிற அதி ஆச்சரியமான புராணத்தை இயற்றினார். அப்படி இயற்றத் தொடங்கு முன்பு அவர் பரம்பொருளை—நிர்க்குண பிரம்மத்தை இங்ஙனம் தியானித்தார்:

"நான் பரப்பிரம்மத்தைத் தியானிப்பேனாக. அவரிடத்திலிருந்து இப்பிரபஞ்சம் தோற்றத்துக்கு வந்துள்ளது. அவரது சான்னித்தியத்தால் பிரபஞ்சம் உயிர் ஓவியமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. அவர் ஆதாரமின்றிப் பிரபஞ்சம் இருக்க இயலாது. சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களுக்கு மூல காரணம் அவரே. அவர் சர்வக்ஞன், சர்வ சக்திமான். அவரே சதுர்முகப் பிரம்மாவின் மனதில் வேதங்களைத் தோற்றுவித்தார்; அறியச் செய்தார். நல்லறிவாளர்க்கும் வேதத்தின் தாத்பர்யங்கள் பூரணமாக விளங்காதபடியால் அதற்கு மறை என்னும் பெயர் வந்தது. சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களால் ஆகிய இந்த மித்யா ஜகத் பரப்பிரம்மம் என்கிற திரையின் மேல் உண்மைபோல—சத்யமானதுபோல ஓடிக்கொண்டிருக்கிறது. இந்த ஜகத் கானலில் நீர், கிளிஞ்சலில் வெள்ளி போன்று தோன்றிக்கொண்டிருக்கிறது. அப்பரப்பிரம்மத்தின்அருளினாலேயே இந்த அறியாமை நீங்கப் பெறும். அவன் அருளால் அவன் தாள் வணங்கி — तन्नो हंसः प्रचोदयात् அந்த இறைவனே நம்மை நல்வழியில் தூண்டுவாராக என்றபடி இறைவனருள் இல்லாமல் உன்னை எப்படி உள்ளபடி அறிந்துகொள்ள முடியும்?''

பகவான் வியாசரால் இயற்றப்பட்ட பாகவதம் மிக உயர்ந்த சாஸ்திரமாகக் கருதப்படுகிறது. உபநிஷதங்களில் சொல்லப்பட்டிருக்கிற எல்லாக் கடவுள் தத்துவங்களையும், பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் பற்றியும், அதி உன்னதமான பக்தி நிலையைப்பற்றியும் குழந்தைக்குத் தாய் கதைகள் சொல்லுகிற போக்கில் அருமையாக, எளிதாக அது விளக்குகிறது. சாதகர்களுக்கு என்றென்றும் அருள் நாட்டத்தை அது வளர்க்கிறதாகவும் அவர்களுக்குச் சாதனத்தில் வழிகாட்டியாகவும் ஹிருதயத் தாபங்களையெல்லாம் போக்குகிற அமிர்த சஞ்சீவியாகவும் பாகவதம் இருக்கிறது. தாபத் திரயங்களால் தபிக்கப்படும் ஜீவர்களுக்கு அது சிரேயஸைப் புகட்டி மன மாசுகளை அகற்றி ஜன்ம சாபல்யமாக்குகிறது. சாதகர்களை என்றும் தன்பால் கவர்ந்து இழுக்கும் திவ்வியப் பிரபந்தமாகப் பாகவதம் இருந்து வருகிறது. அவர்கள் அறியாமையைப் போக்கி அந்தராத்மாவில் இறைவனின் திவ்விய வடிவைப் பிரதிஷ்டை பண்ணிவிடுகிறது. இளங்கொடி பந்தலைப் பற்றிப்படர்ந்து பயனுடைய காய் கனிகளைத் தருவதுபோன்று பக்தனது மனம் கடவுளைப் பற்றிப்படர, பக்தியாம் கனி அதில் முதிரப் பாகவதம் நன்கு பயன்படுகிறது. இறைவனைப் பற்றியே சிந்தித்திருக்க அது வழி செய்கிறது. கடினமான அப்யாசங்களை, அனுஷ்டானங்களை, விரதங்களைக் கடைப்பிடிப்பது கலியுகத்தில் சாத்தியமாய் இல்லை. சரீரம், மனம் பலவீனமாய் இருக்கின்றன. உயிர், அன்னத்தைச் சார்ந்திருக்கிறது. ஆகவே, கைவசம் உள்ள ஒன்று உலகப் பொருள்களை ஓயாது நாடித்திரியும் மனதுதான். அது நாடித்திரியும் பொருள்களின் நிலையாமை, அவைகளின் சத்தற்ற

தன்மை மனதுக்குப்பட்டவுடன் அந்தச் சமயத்தில் பாகவதம் அவன் காதில் படுமானால் அவன் மனது அதில் தீவிரமாகப் பிரவேசிக்கிறது, முன்னேற்றம் அடைகிறது. திரும்ப அது உலகப் பொருள்களை நாடுவதில்லை. அதற்கு வேண்டியது கிடைத்து விடுகிறது. ஜீவனுக்கு வேண்டியவர் கடவுள் ஒருவரே. பாகவதம் படிப்பவர்கள் அல்லது படிக்கக் கேட்பவர்கள் பாக்கியவான்கள். அது கேட்போரின் மனதில் கடவுளின் வடிவத்தைத் தீட்டிவிடுகிறது.

''சிந்தனையும், மேலானதைக் கிரஹிக்கிற தன்மையும் உடைய சான்றோர்களே, தேவரிஷி நாரதர் கடவுளைப்பற்றியே பேசும் இப்புண்ணிய புராணத்தை வைகுண்டத்திலிருந்து பூவுலகுக்குக் கொண்டுவந்தார். வேண்டியதையெல்லாம் தரவல்ல தேவதரு போன்றதும், அமிர்தம் போன்றதும், சதுர் வேதங்களின் சாரம் அடங்கியதுமான பாகவதத்தை எனக்கு நல்கினார். இதை நான் என் குமாரனாகிய சுகருக்கு ஓதினேன். பிறகு இதை சுகர் ராஜ சபையிலும், சான்றோர், ரிஷிகள் முன்னிலையிலும் பாடிப் பரப்பினார். சான்றோர்களே, மீண்டும் மீண்டும் இவ் அமிர்தபானத்தை அருந்துங்கள், வாழ்நாள் எல்லாம் அருந்துங்கள், நீங்கள் முக்தியைப் பெறுவீர்கள்'' என்று வியாசர் வேண்டுகிறார்.

**ரிஷிகளின் கோரிக்கை**

பழங்காலத்தில் விஷ்ணுவின் க்ஷேத்திரமாகிய நைமிசாரண்யத்தில் சௌனகரும் மற்ற ரிஷிகளும் சேர்ந்து சத்திர யாகம் செய்தார்கள். கடவுளை அடைவதற்காக ஆயிரம் ஆண்டுகள் சிரத்தையுடன் செய்யப்படவேண்டிய யாகம் அது. ஒருநாள் காலை ரிஷிகள் யாவரும் தங்கள் தங்கள் அக்கினியை வழிபட்டுவிட்டு அனைவரும் சற்று ஓய்வாகச் சத் விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது உக்கிரசிரவர் அவர்களை நோக்கி வந்தார். அவரைச் சூதர் என்றும் அழைப்பதுண்டு. அவர் மிகவும் கீர்த்தி வாய்ந்த முனிவர். தாமாகத் தங்களைத் தேடிவந்த அவரைப் பார்த்ததும் கூடியிருந்த முனிவர்கள் யாவருக்கும் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. அவருக்கு ஆசனம் அளித்து வணங்கினார்கள். அவரிடம் இங்ஙனம் பிரியத்துடனும் அன்புடனும் பேசினார்கள்:

''குற்றமற்றவரே, தாங்கள் மகாபாரதம் போன்ற இதிகாசங்களைக் கற்றிருப்பது மட்டுமன்றி அவைகளைப் பிரத்யக்ஷமாக விளக்கியிருக்கின்றீர். எல்லாம் அறிந்தவர் பகவான் வியாசர். அவரும் மற்றுமுள்ள சிறந்த முனிவர்களும் இறைவனை நிர்க்குண நிலையிலும் சகுணநிலையிலும் நன்கு அறிந்தவர்கள். அவர்களுடைய அருளால் தாங்களும் அத்தகைய உயர் ஞானம் பெற்றிருக்கின்றீர். குருவானவர் தனது அத்யந்த சீடர்களுக்குச் சாஸ்திரங்களின் உட்பொருளை, நுண் பொருளை, சூக்ஷ்மப் பொருளை அன்புடன் விளக்கியருள்கிறார். ஆகையால் சூதரே நீங்கள் இங்கு இன்று வந்தது எங்கள் பாக்கியம். எங்களுக்கு மேலான நலத்தை, சிரேயஸை, கடவுள் அறிவைப் புகட்டி அருளப் பிரார்த்திக்கிறோம்.

''ஓ தியாக சீலரே, இக்கலியுகத்தில் மானுடர் அற்ப ஆயுள் படைத்தவர், தமோ குணம் நிரம்பியவர், மந்த புத்தி வாய்ந்தவர். மனமும் உடலும் பலவீனமானவை; உடல் சீக்கிரம் நோய்வாய்ப்படும். மனது எளிதில் துன்பத்திற்கு ஆளாகிவிடும். இத்தகைய மானுடரிடத்து நாம் என்ன எதிர்பார்க்க முடியும்? சாஸ்திரங்களோ கணக்கற்றவை. அவைகளின் கொள்கைகளும் கணக்கற்றவை. அவைகளை மானுடர் தாமே படித்து உட்பொருளை அறிவது மிகவும் துர்லபம். சாஸ்திரங்கள் விதிக்கிற கிரியைகளை அனுஷ்டானங்களை இந்தக் குறுகிய ஆயுளில் செய்து முடிக்க முடியாது. குறியை அடையாது இந்த ஜன்மம் வீணாகிவிடலாம். ஆகையால் புனிதரே, பொறுக்கி எடுத்து எங்களுக்குச் சாஸ்திரங்களின் சாரத்தை, சிறந்த பகுதிகளைமட்டும் ஆத்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டுப் புகட்டி அருளுவீராக.

''ஓ சூதரே, பிரபுவான ஹரியானவர் இவ்வுலகை ரக்ஷித்தும் வழி நடாத்தியும் ஆண்டும் வருகிறார். அவரே நல்லோரைக் காக்கவும் உய்விக்கவும் உலகில் மானுட வடிவில் தோன்றி வருகிறார். குறிப்பாகத் தேவகிக்கும்

வசுதேவருக்கும் குமாரராக எதன்பொருட்டு அவதரித்தாரோ அதை எங்களுக்கு உவந்து விளக்கியருளும். அதைக் கேட்க நாங்கள் மிகவும் ஆவல் கொண்டிருக்கிறோம். கலியுக மனிதன் உலகப் பொருள்களால் மிகவும் கவர்ந்து இழுக்கப்படுகிறான். அவைகளிடத்துப் பற்று மிக வைக்கிறான். இதை அவனால் தவிர்த்து இருக்க முடியவில்லை. ஆயினும் ஹரியின் நாமத்தை உச்சரிப்பானாகில் அவனுக்கு விமோசனம் கிடைத்து விடுகிறது. ஏனென்றால் ஹரிபஜனம் ஒன்றே கலியுகத்தில் ஔஷதமாய்க் கருணை செய்யக்கூடியது, எமபயத்தை நீக்க வல்லது. எம்பெருமான் நாமம் சித்த சுத்தியைத் தந்து, ஆச்சரிய மாயையெல்லாம் அகற்றுகின்ற நாமம். ஆகையால் அதை நேரம் வாய்க்கும் போதெல்லாம் பாடியாடி நிர்பயமாய் வாழ்வோம், இடைவிடாமல் எண்ணுவோம். அவரது திருவடித் தாமரையினின்று புனித கங்கை தோன்றி வந்து மூன்று உலகங்களையும் புனிதப்படுத்துகிறது. ஹரிநாமம், பக்தரெல்லாம் பரவசமாய்ப் பாடுகின்ற நாமம். மாமுனிவர் காதலிலே வளர்ந்த நாமம், பூமகளின் திருவுளத்தே பொங்கிவரும் நாமம். இக்கலியுகத்தின் தோஷங்களைப் போக்க இதை விட நல்ல உபாயம் இல்லை. ஆ! அலகிலா விளையாட்டுடையான் அவன். அவனுடைய மாயங்கள் எத்தனையோ! அவன் அருளினால் தன்னைப் பிரம்மாவாகத் தோற்றுவித்துக் கொண்டு சிருஷ்டி செய்கிறான். அவன் அருளினாலேயே, விளையாட்டினாலேயே சிறு குழந்தை மணல் வீடுகட்டி, தானே காலால் யாவற்றையும் அழித்து விட்டு மகிழ்வது போன்று தானே ருத்திரன் ஆகி இந்தச் சிருஷ்டியைத் துடைத்து வருகிறான். அவனுடைய இந்தஅருட்கூத்தை எப்போதும்கண்டு ரசித்தும், மகிழ்ந்து பாடியும் நாரதரும் மற்றத் தெய்விக முனிவர்களும் தங்கள் மனதை எப்போதும் இறைவன் திருவடிகளிலேயே லயித்திருக்கச் செய்கின்றனர். ஆகையால் சூதரே, எங்களுக்கு இறைவனுடைய அவதாரங்களின் விநோதமான சரித்திரங்களையும் லீலைகளையும் பாடியருளுவீராக. நாங்கள் யாவரும் அதன் பொருட்டுப் பேர் ஆர்வமுடன் இங்குக் கூடியுள்ளோம். தங்களுக்குஎல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

“கற்றவர்களுள் சிறந்தவரே, மாயைக்கு யஜமானர், விளையாட்டாகத் தமது மாயா சக்தியால் புரிந்த திருவிளையாடல்களைப் பாடும். அது தெவிட்டாத ஆனந்தத்தைக் கொடுக்கும். இறைவன் மகிமைகளைக் கேட்கக் கேட்க மேலும் கேட்கவேண்டும் என்கிற ஆவல் எழுகிறது. ஸ்ரீராமனாகவும் ஸ்ரீ கிருஷ்ணனாகவும் அவதரித்துப் பகவான் புரிந்த லீலைகள் மானுடர் அவசியம் கேட்டும் கற்றும் உணரவும் வேண்டியவைகள்.

“ஓ சூதரே, கலியின் தீய தோஷங்கள் எங்களைப் பீடிக்காமல் இருக்கவே இப்புண்ணிய பூமியில் பிறந்த நாங்கள் நெடுநாட்கள் அனுஷ்டிக்கப்படவேண்டிய சத்ரயாகத்தைச் செய்ய சங்கல்பம் செய்துகொண்டு அதை நிறைவேற்றி வருகிறோம். ஆகையால் யாக தீக்ஷையில் உள்ள எங்களுக்கு அவகாச நேரம் நன்கு பயன்படத் தெய்வ சிந்தனையில் இருக்க விரிவாகவே இறைவன் மகிமைகளைப் பிரவசனம் செய்வீராக. சம்சார சாகரத்தில் கலிகாலம் மிகவும் பயத்துக்குரியது. நலன் அனைத்தையும் பாழ்படுத்தவல்லது அது. அதனின்றும் எங்களைக் காப்பாற்றத் திருவுளம் கொண்டே கருணாகரன், மாலுமி போன்று தங்களை இங்கு அனுப்பியுள்ளான். ஓ சூதரே, இன்னொன்றும் நீர் எங்களுக்குச் சொல்ல வேண்டும். தர்மரக்ஷகனாகவும் பக்தவத்சலனாகவும் இருந்த பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் மானுட சரீரத்தை உதறி எறிந்து விட்டு வைகுண்டத்துக்கு ஏகிவிட்டார். ஆதலால் இப்போது மானுடருக்குத் தீனபந்துவாகவும் தர்மகோப்தாவாகவும் உலகில் நடமாடும் தெய்வம் யார் என்பதையும் எங்களுக்குச் சொல்லுவீராக.”

**அத்தியாயம் 2**

லோமஹர்ஷணரின் குமாரரான உக்கிரஸ்ரவர் என்கிற பெயர் படைத்த அந்த சூதர் மிகவும் பிரீதியடைந்து தம்மை மிகவும் கண்ணியப்படுத்திய அந்த ரிஷிகளை நோக்கிக் கூறலானார்:

“வியாசரின் குமாரரான சதா பிரம்ம நிஷ்டரான சுகப்பிரம்மத்தை வணங்குகிறேன்.

சன்யாசம் வாங்கிக் கொண்ட பிறகு அவர் ஏகாந்தமாக வனத்தில் திரிந்து கொண்டிருந்தார். மகன் பிரிவை ஆற்ருமல் வியாசர் சுகரைத் தேடிக்கொண்டு வனத்தில் ' என் குழந்தாய் சுகா, சுகா' என்று உருக்கமாகக் கூவிக்கொண்டுபோனுர். சதா பிரம்ம நிஷ்டரான சுகர் இதை அறிந்தார். அன்பினுல் தூண்டப்பட்டவராக ' இதோ இருக்கிறேன் அப்பா' என்று விடை விடுத்தார். இடத்தால் அவர்கள் பிரிக்கப்பட்டிருந்த போதும் அன்பின் இணைப்பினுல் இரண்டு மனங்களும் ஒன்ருயின. சுகரின் விடை ஒரு மரத்தின் மூலமாக வெளியாயிற்று. தந்தையும் மைந்தனும் எவ்வளவு மேலானவர்கள்! சுகரின் ஏகத்வ உணர்வினுல் மரம் பதில் சொன்னது. அதை உணரவல்ல பெருநிலையில் வியாசர் இருந்தார். இந்நிகழ்ச்சி பாகவதத்தில் மிக முக்கியமானது ஒன்று. இது சாஸ்திரங்களின் உண்மை விளக்கமாகவும் சாரமாகவும் உள்ளது.

''சுகரின் திருவடிகளில் தஞ்சமடைகிறேன். மனித வர்க்கத்தினிடத்துப் பேரிரக்கம் கொண்டவராகச் சுகர் இப்புராணத்தைச் சான்ருேர்களுக்கு வெளியிட்டார். அதன் ரகசியப் பொருள்களை விளக்கினுர். மற்று, நர நாராயணர்களையும் அம்பாள் சரஸ்வதியையும் வணங்குகிறேன்.

''ரிஷிகளே! உங்கள் அன்புடைய வேண்டுகோள் மக்களுக்குப் பெருநன்மையைத் தரவல்ல ஹரியின் கதையாக இருப்பதால் எனக்கு மிகவும் பிரீதியாய் இருக்கிறது. ஆத்மசாதகனுக்கு இதைவிடத் திருப்தியான விஷயம் வேறு என்ன இருக்கிறது? சமயானுஷ்டானம் என்பது தன்னலமற்ற தூய பக்தியே ஆகும். இன்பமான வாழ்வு வாழ, சொர்க்கப் பிராப்திக்காகச் செய்யப்படும் கிரியாவிசேஷங்கள் சமயம் அல்ல, ஆத்ம சாதனமும் அல்ல.கடவுள் பக்தி வளர வளர உலகப் பொருள்களிடத்துப் பற்றுக் குறைகிறது. வீண்வாதங்களும் அர்த்தமற்ற கொள்கைகளும் ஆத்ம ஞானங்கள் ஆகா. எது பகவத் பக்தியை, பகவானைப்பற்றிப் பேசுதலில், கேட்டலில் பெருவிருப்பத்தை வளர்க்கவில்லையோ அது சமயக் கோட்பாடு ஆகாது. அவைகளைக் கேட்பதும் அப்பியாசம் செய்வதும் புல்லுக்கு இறைத்த நீராய் வீணுய்ப் போகும். ஆத்ம சாதனங்களில் எந்தவிதமான லௌகிக ஆசைகளும் இருக்கலாகா. ஆத்மசாதனங்களின் குறிக்கோள் சொர்க்கப்பிராப்தி அன்று. மெய்ப்பொருளை ஆராய்ந்து அறியவேண்டும், உண்மையை உணரவேண்டும், கடவுளுடன் இரண்டறக் கலந்துவிடவேண்டும். ஞானிகள் எதைச் சித் என்று சொல்கிருர்களோ, வேதாந்திகள் ஆத்மா, பரமன் என்று எதைச் சொல்லுகிருர்களோ, வைணவர்கள் எதைப் பரமாத்மா, புருஷோத்தமன் என்கிருர்களோ, பக்தர்கள் ஏதைப் பகவான் என்று சொல்லுகிருர்களோ அப்பொருள் ஒன்றே.

''தாயின் சொல்லைக் குழந்தை நம்புவது போன்று நாம் சாஸ்திரத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும்.பிறகு படிப்படியாக நாம் உண்மையின்கண் செல்வோம். உலகப்பற்று ஒழிந்து முடிவில் தெய்வ தரிசனம் கிட்டும். ஆகையால் முதலில் சாஸ்திரத்தினிடத்தில் நமக்கு நம்பிக்கையும் விசுவாசமும் பக்தியும் வரவேண்டும். பிராம்மணுேத் தமர்களே, பள்ளியில் வகுப்புக்கேற்ற பாடம் என்கிற முறை இருப்பது போன்று கடவுள் வழிபாடு மன பரிபாகத்திற்கு ஏற்ற படி அமைகிறது. இந்த மனபரிபாகப் பிரிவினைதான் குலம் எனப்படுகிறது. ஆகையால் குலத்துக்கு ஏற்ற முறைப்படி பூஜை செய்தால் அதுபலன் நிறைந்தது ஆகிறது. தேசம் யுத்தம், பஞ்சமீ போன்ற நெருக்கடியான காலங்களில் இருக்கும்போது அவரவர் வருவாய்க்கேற்ற வரி அல்லது நன்கொடை தருவது போன்று பண்பில் மேலே போகப் போக மனதைப் பரிபூரணமாகக் கடவுளிடத்து ஒப்படைக்கவேண்டும். இதுவே குலத்துக்கு ஏற்ற பூஜை எனப்படுகிறது. சாத்தியமானதைப் பரிபூரணமாகச் செய்ய வேண்டும். ஆகையால் ரிஷிசிரேஷ்டர்களாகிய நீங்கள் பகவானைப் பற்றியே கேளுங்கள்,பாடுங்கள், சதா தியானியுங்கள். கர்மபந்தங்களையெல்லாம் சேதிக்கவல்ல ஹரிஸ்மரணையில் யாருக்குத்தான் விருப்பம் வளராது? (தொடரும்)

---

# முயன்றால் முடியாததும் உண்டோ?

(சுவாமி துருவானந்தர்)

இன்று நம் நாட்டைப் பிடித்துள்ள நோய்களுக்கு அடிப்படையாயிருப்பது அறியாமை. அதன் விளைவுதான் மக்கள் பல இன்னல்களுக்காளாகி இருக்கின்றனர். நாட்டில் எங்கும் அறியாமை இருள் சூழ்ந்திருக்கிறது. இந்த இருளுக்குள் கிடந்து சாவோம் என்று ஒவ்வொருவரும் பிடிவாதம் பிடிக்கிறோமே தவிர இதிலிருந்து விடுபட்டு மீண்டும் வெளிச்சத்திற்கு வருவதற்கு யாரும் முயலுவதில்லை. அந்த அளவுக்கு அறியாமைச் சேற்றில் அமிழ்த்தப்பட்டிருக்கிறோம். இந்தியர்களாகிய நமக்கு நம் அன்றாட பிரச்னைகளைக் கவனிப்பதே பெரும்பாடாக இருக்கிறது. இனி, நாட்டையும், நாட்டிலுள்ள பிரச்னைகளையும் நினைக்க நேரம் எங்கே என்று குரல் கொடுப்பவர்களைத்தான் எங்கும் காண்கிறோம். இன்று நம் முன்னே உள்ள முக்கியமான பிரச்னை என்ன? எந்த வழிகளைக் கையாண்டால் அந்தப் பிரச்னைகளைத் தீர்க்க முடியும் என்று இந்திய மண்ணில் தோன்றியுள்ள ஒவ்வொருவரும் சில நிமிடங்கள் நினைத்து, அதன் பொருட்டு உழைத்தால் நாம் நினைத்ததை அடைய முடியும். முதல் பிரச்னை வறுமை.

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்
இங்கு வாழும் மாந்தர்க் கெல்லாம்

என்றான் கவிஞன் பாரதி. ஆனால் அவன் அன்று பாடிவிட்டுப் போனதோடு சரி. நாட்டில் வறுமை போய்விட்டதா? பசுமைப் புரட்சி செய்து பசியாற உணவு கொடுப்போம் என்றெல்லாம் பேசுவது மேடையோடு சரி. ஆனால் இன்று நாட்டில் உணவுத் தட்டுப்பாடில்லாது உள்ளதா? பட்டினிக் கொடுமை, வறுமையின் கொடுமை என்று பத்திரிகையில் வராத நாள் உண்டா? இதற்குக் காரணம் என்ன? பாரபட்சமின்றி ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் நம் நாடு வறுமையில் வாடுவதற்குரிய காரணங்களை யாரும் சுலபமாக அறிந்துகொள்ள முடியும்.

நம் நாட்டில் இயற்கைக் கனிவளங்கள் ஏராளமாக உள்ளன. இருக்கிற நிலவளத்தையும், நீர்வளத்தையும், கனிவளத்தையும் முறையாக நாம் எல்லாரும் பயன்படுத்தினால் நம் வறுமை நீங்கி உலக நாடுகளுக்கே உணவு தானியங்களை ஏற்றுமதி செய்யமுடியும் என்று பொருளாதார நிபுணர்கள் அடித்துச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லுவதை மக்கள் பின்பற்றினால் நம் நாட்டில் பட்டினிக்கொடுமை ஏற்படுமா? வெளி நாட்டிலிருந்து உணவுப் பொருட்களை, கனிவளங்களை இறக்குமதி செய்ய வேண்டிய பரிதாப நிலை நமக்கு ஏற்படுமா? இயற்கை நமக்கு அனுகூலமாக இருந்தாலும், அதைப்பயன்படுத்தத் தேவையான அறிவு இல்லாமையால்தான் நம் விதி இப்படி ஆகிவிட்டதே என்று நம்மையே நொந்து கொண்டிருக்கிறோம்.

நிலமிருந்தும் அதைச் சரியான முறையில் சாகுபடி செய்யக்கூடிய வாய்ப்பிருந்தும் உழைக்க முன்வராது சுலபமாகச் சம்பாதிக்க வழிதேடி அலைகிறவர்கள் நிலத்தைத் தரிசாகப் போடத்தானே செய்வார்கள்! முறையாக உழைத்துப் பாடுபட்டால் அதன் விளைவு தானாகக் கிடைக்கும் என்கிற நல்லறிவு ஒவ்வொரு மனிதனுக்கும் வரவேண்டும். முயற்சியும் உழைப்பும் எந்தச் சமுதாயத்திற்கு இயல்பாக இருக்கிறதோ அந்தச் சமுதாயம் அழியாது; தலை நிமிர்ந்து நிற்கும். முயற்சியும், உழைப்பும் குன்றிவருகிற சமுதாயம் விருத்தியானதாகச் சரித்திரம் இல்லை. முயற்சியும் உழைப்பும் பிறர் கொடுத்து வருவனவல்ல. அவைகளை ஒவ்வொருவரும் தாங்களாகவே பெருக்கிக் கொள்ள வேண்டும். உணவுப் பொருள்களை மட்டும் உற்பத்தி பண்ணவில்லையென்றால் மக்களிடம் வைரமும், தங்கமும், வெள்ளியும், பணமும் இருந்து என்னபயன்? அவைகளால் பசியைப் போக்கிவிட முடியுமா? விவசாயி சேற்றிலே காலை வைத்து விவசாயம் பண்ணுவிட்டால் மற்றத் துறைகளில் உள்ள மாந்தர் சோற்றிலே கை வைக்க முடியுமா? இதை வைத்துத்தான்

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்–மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர் என்ருர்கள் சான்ருேர்கள். இக்கரைக்கு அக்கரை பச்சை என்று சொல்லுவார்கள். அது போன்று வியாபாரி, டாக்டர், இன்ஜினியர் போன்ற பல வழிகளில் சம்பாதிக்கும் உத்தியோகங்களைப் பெரிதாக எண்ணி ஓடாது, செய்யும் தொழிலே தெய்வம் என்ற கோட்பாட்டிற்கொப்ப விவசாயத்திலும் நிறைந்த அளவு பாடுபட்டுப் பலன் பெற முடியும். முயன்ருல் முடியாததும் உண்டோ ?

உழைப்பவன் ஒருவன், உண்டு கொழுப்பவன் இன்னொருவனே என்கிற புரட்சி சித்தாந்தம் என்று எழுப்பப்பட்டதோ அன்றே பொதுவுடைமைக் கொள்கை பரவ ஆரம்பித்துவிட்டது. விழலுக்கு நீர் பாய்ச்சி மாய மாட்டோம்; வெறும் வீணருக்கு உழைத்து உடலம் ஓயமாட்டோம் என்ருன் பாரதி. இன்றைய நிலை என்ன? உழைத்து ஓடாகச் சுருங்கி ஒரு சமுதாயம் இருக்கிற போது அவர்களைச் சுரண்டி அவர்கள் ரத்தத்தை உறிஞ்சும் கொடிய விஷக்கிருமிகள் தாம் இன்றைய அரசியல்வாதிகள். ஆம். ஏமாற்றும், சுயநலமும், பாமரமக்களைப் பகடைக் காயாக ஆட்டும் பித்தலாட்டமும் கூடிய மொத்த வடிவம் இந்த அரசியல்வாதிகள். உழைக்காது பணம் சம்பாதிப்பவர்கள். படிக்காது, பாமரமக்களை ஏமாற்றியே பெரும்பெரும்பதவிகளில் வாழ் நாளெல்லாம் ஒட்டிக்கொண்டிருப்பவர்கள். சமயத்தைச் சமயம் போலப் பயன்படுத்தும் சாகஸக்காரர்கள். கடவுள் இல்லை, கடவுளை நம்புகிறவன் காட்டுமிராண்டி என்று கூறுபவர்கள் ஹிந்துக்களாகத்தான் இருக்கிருர்கள். அவர்கள் கோழைகள். முஸ்லிம்களிடத்திலோ, கிறிஸ்துவர்களிடத்திலோ இயேசு இல்லை என்றும் அல்லா இல்லை என்றும் பேசத் துணிவு அவர்களுக்கு இல்லை. எந்தச் சமயமும் நாட்டிற்குத் தேவையில்லை என்று கூறும் இந்தச் சந்தர்ப்பவாதிகள் ஹிந்துமதத்தைமட்டும் தாக்குகிருர்கள். காரணம் ஹிந்துக்களிடையே மத உணர்ச்சி இல்லாமையே. கோயிலில் சமஸ்கிருதத்தில் அர்ச்சனை சொல்லக்கூடாது, தமிழில்தான் சொல்லவேண்டும் என்பவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். உலகத்தில் எந்தப் பகுதியிலுள்ள ஹிந்துக்கோயில்களிலாவது ஆங்கிலம், பிரஞ்சு போன்ற வேறு பாஷைகளில் அர்ச்சனை சொல்லுகிருர்களா ? எந்த மாநிலத்திலாவது எங்கள் மொழியில்தான் அர்ச்சனை சொல்லவேண்டும் என்று கிளர்ச்சி பண்ணுகிருர்களா? சர்ச்சில் லத்தீன் பாஷையில் சொல்லுகிருர்கள். மசூதியில் அராபிய மொழியில், உருதுமொழியில் வழிபாடு நடத்துகிருர்கள். தமிழ்நாட்டிலுள்ள கிறிஸ்துவக் கோயில்களிலும் மசூதிகளிலும் தமிழில்தான் பிரார்த்தனை செய்யவேண்டும் என்று தமிழ்ப்பற்றுடைய யாரும் சொல்லுவதில்லை. ஹிந்து ஆலய விஷயங்களில் தலையிட்டு வெறுமனே குழப்பத்தை ஏற்படுத்துவதை அவர்கள் உடனடியாக நிறுத்தவேண்டும். நேர்மையாகப் பாடுபட்டு, முறையாகச் சமயவழிபாடு பண்ணி நல்லவனுவதைச் செயல்முறைக்குக் கொண்டுவரவேண்டும். காலம் மாறுகிறது. தூங்கிக்கொண்டே இருப்பவன் எப்போதும் தூங்கிக்கொண்டே இருக்கமாட்டான். ஒரு சிலரை சில நாட்களுக்கு ஏமாற்றிப் பிழைப்பு நடத்தலாம். எப்போதும் எல்லாரையும் ஏமாற்றிப் பிழைப்பு நடத்தமுடியாது என்ற உண்மையை உணர்ந்து நம்மால் நாட்டிற்கு நல்லதை எவ்வளவு பண்ணமுடியும் என்பதைச் சிந்தித்து இருக்கிற குறுகிய கால ஆயுளில் நல்லது செய்ய முயலுங்கள். நல்லது பண்ணமுடியாவிட்டால் கேடாவது பண்ணுது இருக்கத் தீர்மானம் செய்து கொள்ளுங்கள். முயன்ருல் முடியாதது உண்டோ ? தன்னலத்தை மறந்து பிறர் நலனுக்காகவே வாழ முயன்ருல் அரசியல் துறையும் அங்கீகரிக்கக் கூடியதே. மகாத்மா காந்தி வாழ்ந்து காட்டவில்லையா?

இன்றைய சிறுவர்கள்தாம் எதிர்காலத்தில் நாட்டை உருவாக்கும் சிற்பிகளாவார்கள். அத்தகைய இளம் தலைமுறையினருக்கு முறையான கல்வியையும், தேசபக்தியையும் தூய ஒழுக்கத்தையும், தெய்வ பக்தியையும் தருவது பெற்ருேர்கள், ஆசிரி

வர்கள் கடமையாகும். ஒரு பழத்தைச் சுவைத்து ஆராய்ந்து அதன் மரத்தின் தன்மையை அறிந்துகொள்ளலாம். அது போன்று ஒரு சிறுவனின் அல்லது ஒரு சிறுமி யின் பழக்க வழக்கத்தை, குணத்தைக்கண்டு அவர்கள் பிறந்து வளர்ந்து வந்த சூழ் நிலையை அறிந்துகொள்ளமுடியும். வீட்டில் இருக்கும்போது சிறுவர் சிறுமியருக்கு அவ் வப்போது நல்ல அறிவுரைகள் கூறி அவர் கள் அதன்படி நடக்கின்றனர்களா எனப் பெற் றோர்கள் கண்காணிக்க வேண்டும். அவர் களிடம் என்ன திறமை இருக்கின்றது என் பதை ஆராய்ந்து அந்தத் திறமையை வளர்க்க முயலவேண்டும். இதையெல்லாம் கவனிக்க எத்தனை பெற்றோர்களுக்கு இய லும்? ஆகவே மூன்று வயது ஆவதற்குள்ளே நர்சரிப்பள்ளியிலே சேர்த்துவிட்டு 'அப் பாடா, ஒருவகையாக வீட்டிலிருந்த உபத்தி ரவம் கொஞ்சம் குறைந்தது' என ஆறுதல் அடைகிறார்கள். இவர்கள் சேர்த்து விட்டு வந்த பள்ளி ஹிந்துக்கள் நடத்தி வரு கிற நர்சரிப்பள்ளியாக இருந்தால் குழந்தை தப்பித்தது. அப்பள்ளி கிறிஸ்துவப் பள்ளி யாக இருந்தால், அங்குச் சேர்க்கப்பட்ட ஹிந் துக் குழந்தைகள் கிறிஸ்துவர்களாகத்தான் மாறி வருவார்கள். மேற்கத்திய நாகரிகமே வடிவெடுத்தவர்களாகத்தான் அவர்கள் இருப்பார்கள். தாய்மொழியில் எழுதவோ, படிக்கவோ, பேசவோ தெரிந்துகொள்ளாது அன்னிய மொழியில் தட்டுத் தடுமாறித் தப் பும் தவறுமாகப் பேசுவதைப் பார்த்துப் பெருமைப்படுகிற அடிமைப் புத்திபடைத்த ஹிந்துக்கள் விழித்தெழுவார்களா? சிந்தி யுங்கள்! நம்கலாச்சாரத்தை, நம் பாரம்பரி யத்தை, நம் பண்பை நம் பிள்ளைகள் கற்க வில்லையென்றால் வேறு யார் கற்கப் போகி றார்கள்? ஹிந்துக்கள் நடத்துகிற பள்ளியில் தான் தங்கள் குழந்தைகளைச் சேர்க்கவேண் டும். அப்படிப் பள்ளி இல்லையென்றால் வேறு மதத்தார் நடத்தும் பள்ளியில் சேர்க்காது வீட்டிலேயே பெற்றோர் புகட்டுவது இன் னும் உத்தமம். வேறு வழியில்லாது கிறிஸ் துவப் பள்ளியில் படிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால் நம் ஹிந்து தர்மப் பண்பை விடாது அதில் ஊறி வளர்ந்து வரப் பெற் றோர் பெரும் துணையாகவிருக்கவேண்டும்.

தகுதியுள்ள பிரஜைகளை உருவாக்குவ தில் தாய் தந்தையர் மட்டுமல்லாமல் கல்வி புகட்டுகிற ஆசிரியரும் துணைபுரிய வேண்டும். இன்றைக்குள்ள சூழ்நிலையில் குரு சிஷ்ய இணக்கம் என்பது வெறும் கேலிக் கூத்தாக ஆகிவிட்டது. ஆசிரியர் எப்படியோ மாணவன் அப்படி என்கிற கோட்பாட்டை இப்போதுள்ள நிலையில் காணலாம். தகுதியில்லாதவர் சிலர் வேறு வேலை கிடைக்காது பாடம் புகட்டும் பணி யில் புகுந்துள்ளனர். அவர்கள் குரு ஸ்தா னம் வகிப்பது அவ்வளவு எளிதான காரியம் அன்று. குரு எதைப் புகட்டுகிறாரோ அதன்படி அவர் நடந்து காட்டவேண்டும். ஆனால் இன்றைய சூழ்நிலையில் தமிழ், கணக்கு, விஞ்ஞானம் போன்ற பாடங்களைப் புகட்டும் ஆசிரியர்கள் தங்கள் பாடத்தில் மட்டும் கவனம் செலுத்தி விட்டு ஒழுக்கத் தைப்பற்றி அவர்கள் கவலைப்படாதவர்க ளாக இருக்கிறார்கள். அத்தகைய ஆசிரியர் களிடம் பயின்றுவருகிறவன் ஒழுக்கத்தைப் பற்றி எங்ஙனம் தெரிந்துகொள்ளமுடியும்?

ஆசிரியர் என்பவர் எரிகிற விளக்குக்கு நிகர். எரிகிற விளக்குத்தான் மற்ற விளக்கு களை எரிய வைக்கமுடியும். அதேபோன்று ஆசிரியர் அரசியல் வாசனை அற்றவராக, ஒழுக்கத்தை உயிரைவிட மேலானதாக எண்ணுபவராக விளங்கி தம் வாழ்க்கையின் மூலம் தம்மிடம் பயிலும் மாணாக்கர் களுக்குப் புகட்டவேண்டும். இன்றைய நிலை யில் நாம் காண்கிற பித்தலாட்டம், ஏமாற் றுதல், மோசம் செய்தல் போன்றவைகள் படித்தவர்களால்தான் செய்யப்படுகின்றன. பள்ளியிலும் கல்லூரியிலும் புகட்டப்படும் பயிற்சியில் கட்டுப்பாடு, அடக்கம், நேர்மை, சத்தியம், புலனடக்கம் முதலியன புகுந் திருந்தால் இப்பொழுது காணப்படுகிற வெறிச் செயல்கள் இருக்கமாட்டா. பூமியி லிருந்து தங்கக்கட்டி வெட்டி எடுக்கப்படு கிறது. பூமியிலிருந்து எடுக்கப்படுகிறபோது அது அசுத்தம் கலந்துதான் இருக்கும். ஆனால் படிப்படியாக அதைச் சுத்தம் செய்து

சொக்கத் தங்கமாக்கி ஆபரணம் செய்து இறைவனுக்கு அணிவித்துக் காண்கிற போது மனதைக் கவருகிறதன்றோ? அதே போன்று பூமியில் நட்டப்பட்ட விதையிலிருந்து செடி வளர்ந்து அரும்பாகி, மலராகி வண்ண வண்ண நிறங்களில் அது கண்ணைப் பறிக்கிறது. இயற்கை நமக்கு இதைப் புகட்டுகிறது. அறிவும், ஆற்றலும், நற்பண்பும், சீரிய ஒழுக்கமும், இறை பக்தியும் வளரப் பள்ளிக்கு அனுப்பி வைக்கிறோம். பத்துப் பதினைந்து ஆண்டுகள் கழித்துப் பையனைப் பார்க்கிறோம். அவன் உயர்ந்த பண்புகளை, பழக்க வழக்கங்களைப் பெற்றிருந்தால் அந்தப் பள்ளியை, அவனுக்குக் கல்வி புகட்டும் ஆசிரியரை வாயாரப் புகழ்ந்து மனதார வாழ்த்தியிருப்போம். மாருக அவன் தீய பழக்கங்களுக்கு உறைவிடமாகவிருந்து நாமே வெறுக்கத்தக்க அளவுக்கு அவனுடைய நடவடிக்கை இருந்தால் அந்தப் பள்ளியையோ அந்த ஆசிரியரையோ பாராட்ட மனம் வருமா? தம்மிடம் பயிலும் நல்ல மாணவர்களிடம் நாஸ்திகத்தைப் புகட்டி, கீழ்த்தரமான செயல்களைச் செய்யத் தூண்டி அவர்களைக் கெடுத்து சமுதாயத்தில் நச்சுக் கிருமிகளைத் தோற்றுவிப்பது ஆசிரியர் குலமே. திருட்டு, ஏமாற்றுதல் போன்ற கீழ்த்தரமான செயல்களில் ஈடுபட்டு வந்த ஒருவனை நல்லவனுக ஆக்கிச் சமுதாயத்துக்குத் தருவதும் அந்த ஆசிரியர் குலமே. காலம் கெட்டுப் போய்விட்டது; நாடு கெட்டுப்போய்விட்டது என அரசியல் பேசி அரசியல் குழப்பத்தில் விழாத, மட்டமான காம உணர்வைத் தூண்டும் நூல்களைத் தொடாத, உத்தம மாணவர்களை உருவாக்கும் பணியொன்றையே தம் குறிக்கோளாகக் கொண்டு எந்த ஆசிரியர் நடந்து வருகிருரோ அவர்தாம் உண்மையில் எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும் என்ற கோட்பாட்டுக்குப் பொருந்தியவராவார். மற்றவர்கள் வெறும் வயிற்றுப் பிழைப்புக்காகப் பணிபுரிந்தவர்களாவார்கள். ஒவ்வோர் ஆசிரியரும் தாம் நிச்சயம் அத்தகைய ஆதர்சன ஆசிரியராக, குருவாக முடியும் என்று தீர்மானித்து அதன்படி நடந்தால் நிச்சயம் அவர்களால் அந்நிலைக்கு வர முடியும். முயன்ருல் முடியாதது உண்டோ?

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது கோட்பாடு. அந்தக் கோட்பாட்டோடு தேசம் என்ற பதத்தையும் சேர்த்து மாதா, பிதா, குரு, தேசம், தெய்வம் என்று புதிதாக நாம் புகட்டவேண்டிய அவசியம் இப்போது ஏற்பட்டுள்ளது. நம்தேசத்திற்காகஉழைக்கவும், நாட்டிலுள்ள ஏற்றத்தாழ்வைப்போக்கவும், ஜாதி பேதமற்ற சமுதாயத்தை உருவாக்கவும், நம் தேசத்தின் பெருமையை உலகறியச் செய்யவும் ஹிந்துக்களாகிய நாம் பாடுபட வேண்டும். நாட்டு மக்களிடம் தேச பக்தி வர வரக் குறைந்து வருகிறது. நாடு சுதந்தரம் அடைய வேண்டும் என்ற ஓர் எண்ணமே நாடு சுதந்தரம் அடைவதற்கு முன்பு யாவரிடமும் இருந்தது. இப்போது சுதந்தரம் அடைந்து முப்பத்தாறு ஆண்டுகள் ஆகின்றன. நாம் எதில் எந்த அளவில் முன்னேறியுள்ளோம் என்பதை யோசிக்க வேண்டிய நிலையிலிருக்கிறோம். மிகச் சிறிய நாடுகளான ஜப்பானும், இஸ்ரேலும் உலகமே பார்த்து வியக்குமளவுக்கு முன்னேறக் காரணம் அவர்களுடைய தாய் நாட்டுப் பற்றுதான். தேச பக்தி உள்ளவனிடம் தான் தெய்வபக்தியுமிருக்கும். சுதந்தரம் அடைந்து ஆண்டுகள் பல ஆகியும் அடிப்படை உரிமை மறுக்கப்படுகிறது. நாட்டு முன்னேற்றத்திற்கு மக்களின் ஒற்றுமை தான் மிக மிக வேண்டப்படுவது. ஜப்பான், இஸ்ரேல், ரஷ்யா போன்ற நாடுகள் முன்னேறக்காரணம் அவர்களின் நாட்டுப்பற்றும் ஒற்றுமையுமேயாம். வெளிநாட்டிலிருந்து நம் நாட்டிற்குக் கொள்ளையடிக்க வந்த முஸ்லீம்கள் நம்மிடையே உள்ள போட்டி பொருமை, சண்டை, சச்சரவைப் பயன்படுத்தி நம்மில் பலரை முஸ்லீம்களாக மதம் மாற்றி நாட்டை ஆண்டார்கள். மொகலாயர்கள் க்ஷீணிக்க ஆரம்பித்த பொழுதே ஆங்கிலேயர்கள் ஒற்றுமையாக இந்தியாவுக்குள் புகுந்தார்கள். அறியாமையும் வறுமையும் சூழ்ந்திருந்த சூழ்நிலையைப் பயன்படுத்தி கிறிஸ்துவப் பாதிரிகளை அனுப்பி ஹிந்துக்

களைக் கிறிஸ்துவர்களாக்க முயன்றூர்கள். ஆட்சி, அதிகாரம் அவாகள் வசமிருந்ததால் நாடு முழுவதும் சர்ச்சுகள், பள்ளிகள், கல்லூரிகள், மிஷன் ஆஸ்பத்திரிகள் முதலியவற்றைப் பிரம்மாண்டமாகக் கட்டி முடித்தார்கள். சேவை என்ற போர்வையில் ஏராளமான மதமாற்றம் இன்று வரை நடைபெற்றுக்கொண்டுதானிருக்கிறது. இந்தியாவை முஸ்லீம் நாடாக்க வேண்டும் என்று முஸ்லீம்கள் திட்டமிட்டு ஒற்றுமையாகச் செயல்படுகின்றனர். கிறஸ்துவர்கள் இந்தியாவைக் கிறிஸ்துவ நாடாக்கவேண்டும் என்று திவிரமாகத் திட்டமிட்டு என்னென்ன முறைகளைக் கையாள முடியுமோ அத்தனை முறைகளையும்' கையாண்டு பார்க்கின்றனர். இவ்வுண்மையை அறியாத ஹிந்துக்கள் என்ன செய்வதென்று தெரியாது ஜாதியின் பெயரால் வேற்றுமைகளை வளர்த்து ஆயிரத்தெட்டு ஆசாரமுறைகளைச் சிருஷ்டிப்பதால் ஹிந்துக்கள் ஒன்றுபடுவது எங்ஙனம்? ஒரு காலத்தில் உலகமே வியந்து போற்றிய நாகரிகம் ஹிந்து நாகரிகம். முனிவர்கள் தவம் செய்த புண்ணிய பூமி இது. ஏதோ இடையில் ஏற்பட்ட குறைபாடு காரணமாக அடிமைப்பட்டோம்; அடி வாங்கினோம். ஆனல் காலம் செல்லச் செல்ல உணர ஆரம்பித்து விட்டோம். இந்தியாவில் உள்ள ஹிந்துக்கள் அனைவரும் ஒன்று சேரவேண்டிய தருணம் வந்துவிட்டது. ஹிந்துக்களிடம் ஒற்றுமை இல்லாததால் நாடு அரசியல் வாதிகளின் கையில் சிக்கித் தள்ளாடிக்கொண்டிருக்கிறது. காசைச் சுருட்டுவதில்தான் கண்ணுக இருக்கிறுர்களேயன்றி ஏழையின் கண்ணீரைத் துடைக்கும் மக்கள் இல்லை. நாட்டுக்காக உயிர்கொடுத்த உத்தமர்களைப் பற்றிச் சிறுவர்களுக்குப் புகட்டுவதில்லை. சத்ரபதி சிவாஜி மன்னன், வீர வாஞ்சிநாதன், சுப்ரமணிய சிவா போன்ற வீரப் பெருமக்களின் வரலாறுகள் பாடப் புத்தகங்களிலிருந்து அகற்றப்படுகின்றன. அதற்கு மாருக மாணவர்களுக்குத் தேவையில்லாத, இறையுணர்வைக் கெடுக்கக்கூடிய விஷயங்கள் பாடப் புத்தகங்களில் இடம்பெற்றிருக்கின்றன. இப்படிப்பட்ட தீயவாசனைகளில்ஊறிவரும் சிறுவர்களிடம் நல்லொழுக்கத்தையும் தெய்வ பக்தியையும் எப்படிக் காண முடியும்? முஸ்லீம்கள் ஓர் இனமாக எழுந்ததால் பாகிஸ்தான் பிரிந்தது. அது இஸ்லாம் நாடாகியது. அடுத்துள்ள பங்களாதேஷ் இஸ்லாம் நாடாகிவிட்டது. ஆனல் இந்தியாவோ ஊழல் பேர்வழிகளாகிய அரசியல் வாதிகளின் கையில் சிக்கிக்கொண்டு சமயச் சார்பற்ற அரசு என்று இன்னும் புலம்பிக்கொண்டே இருக்கிறது. என்றைக்கு ஹிந்துக்கள் ஒற்றுமையாகஇயங்க ஆரம்பிக்கிறுர்களோ அன்றைக்குத்தான் இந்தியா உயர்வடையும். அப்படிப்பட்ட ஒற்றுமை ஏற்படாத வரைக்கும் ஹிந்துக்கள் சுதந்தரமாக வாழ முடியாது. தாய் நாட்டில் சுதந்தரமாகச் செயல்பட முடியாது. கீழ் நிலையில் உள்ள தாழ்த்தப்பட்ட நம் ஹிந்து சகோதரர்களை அரவணைத்து ஹிந்து உணர்ச்சி ஊட்டி நம் வீட்டில் உள்ள குழந்தைகளுக்கு ஹிந்து சமயப் பாடல்களையும் கதைகளையும் புகட்டி அவர்களைச் சிறந்த தேசபக்தர்களாக, தியாகிகளாக, வீரர்களாக உருவாக்குவது ஹிந்துக்களாகிய நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். இப்போது நாட்டின் நிலை என்ன? அரசாங்கத்தை அச்சுறுத்தித் தங்கள் காரியத்தைச் சாதிக்கக் கிளர்ச்சி செய்கிறுர்கள். அதற்கு இடம் தரலாகாது. நாட்டின் நலனில் அக்கறை கொண்டு ஒவ்வொரு ஹிந்துவும் ஒற்றுமையாக இருந்து செயல்பட்டால் நாட்டில பிரிவினைவாதிகளைத் தலையெடுக்காதபடி செய்து விடமுடியும். ஒரு தனி மனிதனுக்குப் போதாத நேரம் என்று கஷ்டப்படும் பொழுது ஆறுதலுக்காகச் சொல்லுவது உண்டு. தனி மனிதனுகவிருந்தாலும் சரி, குடும்பமாகவிருந்தாலும் சரி, நாடாகவிருந்தாலும் சரி, போதாத நேரம் என்பது எப்படியோ வந்து பாகிஸ்தான், பங்களாதேஷ் நம்மிடமிருந்து பிரிந்துபோய் விட்டன. புனிதஸ்தலமாகிய திருக்கைலாயமும் நம் கையைவிட்டுப்போய்விட்டது.அந்த ஸ்தலத்திற்குப் போய்த் தரிசனம் செய்து வருவதற்கு Passport பாஸ்போர்ட் எடுத்

துப் பலவகையான நிபந்தனைகளுக்கு உட்பட்டுத் தரிசித்து வரவேண்டிய நிலையிலிருக்கிறோம். இவ்வளவு நடந்தும் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தால் அமரநாத், பத்ரிநாத், கேதார்நாத் ஸ்தலங்களும் நம்மிடமிருந்து பிடுங்கப்பட எவ்வளவு காலம் ஆகும்?

கிறிஸ்துவர்களும், முஸ்லீம்களும் பகிரங்கமாக இந்த நாட்டைத் தங்கள் நாடாக்கப் போவதாகப் பல தடவை பேசியும் எழுதியும்கூடத் தமோகுணத்தில் ஊறியுள்ள நம் ஹிந்துக்கள் விழிப்படையாதிருக்கின்றனர். அவர்கள் எப்பொழுது எழுந்து ஒன்று சேருவார்களோ அன்றைக்குத் தான் வீறு கொண்ட ஹிந்துக்களாவோம்.

சிறு குழந்தையிடத்தில் பத்துப் பைசா பெறுமான தின்பண்டத்தைக் கொடுத்து விலைமதிப்புள்ள ஆபரணத்தைக் கேட்டால் அது கொடுத்துவிடும். அதே போன்று வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கியுள்ள நம் மக்களுக்கு உணவு, உடை, இருக்கைகளைக் கொடுத்துக் காப்பதாகக்கூறி அவர்களைத் தங்கள் மதத்துக்கு இழுக்கும் கிறிஸ்துவ முஸ்லீம்களை நாம் நன்கு கண்காணிக்க வேண்டும். உள்ளூரில் கோயில் இருந்தால் அவ்வூர் ஹிந்துக்களனைவரும் தினமும் ஒரு நாளைக்கு ஒரு தடவையாகிலும் ஒன்றுகூட வேண்டும். அந்த ஊரை எவ்வாறு மேம்படுத்துவது என்பதைப்பற்றியும், அவ்வூரில் குற்றம் குறைகள் நடைபெறாமல் அனைவரும் உழைத்துச் சம்பாதித்து அரசியல் நாற்றத்தை அடியோடு குழி தோண்டிப் புதைத்து அந்த ஊர் மக்கள் நல்ல பண்புக்கு இருப்பிடமாகத் திகழ ஏற்பாடுசெய்ய வேண்டும். அந்த ஊர்ப்பள்ளியில் ஒவ்வொரு நாளும் ஒரு மணிக்குக் குறையாது நீதி போதனை என்ற அறபோதனையைக் கட்டாய பாடமாக ஆக்கி அதைப் புகட்ட நல்ல தூய்மையான ஹிந்து உணர்வுள்ளவர்களை அமர்த்தி மாணவ மாணவிகளுக்குப் புகட்ட ஏற்பாடு செய்யவேண்டும். குடிப் பழக்கம், லாகிரி வஸ்துவை உபயோகித்தல் முதலிய கெட்ட பழக்கங்களை அறவேவிட்டவர்களாக அம்மக்களை உயர்த்த வேண்டும். நமது ஹிந்து சமய நூல்களில் சொல்லியுள்ள கோட்பாடுகளைச் சிறுவர்கள் முதல் பெரியவர்கள்வரை அனைவருக்கும் தெளிவாகப் புகட்டவேண்டும். அதில் நல்ல தெளிவானவர்கள் பக்கத்துக் கிராமங்களில் உள்ள மாந்தருக்கும் இதைப் புகட்டலாம். ஒவ்வோர் ஊரிலும் உடற்பயிற்சிக் கழகம் ஏற்படுத்தி ஊர் மக்கள், குறிப்பாகச் சிறுவர்களுக்கு நல்லமுறையில் உடற்பயிற்சி அளிக்கவேண்டும். சேரியில் வாழக்கூடிய நம் ஹிந்து சகோதரர்களையும் இதில் இணைத்து ஜாதிபேதமற்று ஒருவருக்குக் கஷ்டம் வந்தால் அதில் மற்றவர் தலையிட்டுத் துன்பத்தை நீக்க முயலலாம். ஜாதிக் கலவரங்கள் ஏற்படாத வகையில் அந்தந்த ஊரில் ஹிந்து சமய மன்றங்களை ஏற்படுத்தி ஹிந்து சமயக் கொள்கைகளை மக்கள் மத்தியில் புகட்டவேண்டும், பொருள் வசதி படைத்தோர் அரசாங்கத்தை எதிர்பாராது அவரவர்கள் ஊரில் ஹிந்துசமயப் பள்ளிகளை உண்டு பண்ணுவோம் எனத் தீவிரமாகச் சிந்தித்துச் செயல்படவேண்டும். மருத்துவத் தொண்டும் செய்யவேண்டும். நமது ஹிந்துசமய வளர்ச்சிக்காகத் தொண்டாற்ற துறவு மனப்பான்மை உள்ளவர்கள் ஒன்று சேர்ந்து சேவை செய்ய முன்வரவேண்டும். ஒவ்வொரு குடும்பத்தாரும் இத்தகைய ஹிந்துசமய வளர்ச்சிக்காகத் தங்கள் குழந்தைகளை ஈடுபடுத்த ஆயத்தமாக இருக்க வேண்டும். நம் வீட்டில், நம் தெருவில், நம் ஊரில், நம் மாவட்டத்தில், நம் மாகாணத்தில், நம் நாட்டில் ஹிந்துக்களின் ஒற்றுமைக்காகப் பாடுபடுவேன் என்று ஒவ்வொரு ஹிந்துவும் உறுதிமொழி எடுத்துக்கொண்டு அதற்கேற்ப உழைத்து வந்தால் எல்லாத் துறைகளிலும் சுபிட்சம் அடையலாம். மேல் நாட்டாரும் நம்மை வந்து அண்டி நம் சமயத்தில் சேர்ந்து அதனால் உலகம் முழுவதும் சுபிட்சம் அடையும். அந்த நாள் வராமலா போகும்? முயன்றால் முடியாதது உண்டோ என்ற கோட்பாட்டிற்கு ஏற்பத் தீவிரமாக உழைத்தால் நாட்டில் ஹிந்து சமய ஒற்றுமை ஏற்பட்டு நம் நாடு சிறப்படைவது திண்ணம்.

# கயிலைமலை யாத்திரை

( சுவாமி குஹானந்தர் )

எங்களுக்கு முன் கைலாயம் சென்ற குழுவினரிடம் ஒற்றுமையில்லை. அவர்கள் சமையல் செய்வதற்கு வேண்டிய ஏற்பாட்டுடனும் வரவில்லை. தங்களிடமிருந்த பிஸ்கட், உலர்ந்த பழம், பால் பவுட்ர் முதலியவற்றைச் சாப்பிட்டுக்கொண்டு கயிலைமலையை வலம் வரும்போது மூன்று நான்கு பேர்களாகப் பிரிந்து சுற்றி வந்ததால் வழி தவறிச் சென்ற இரு குழுவினர் மறுநாள் காலைதான் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் நான்குபேர் நடக்க முடியாமல் கூடாரத்திலேயே தங்கிவிட்டனர். கயிலை நதியில் எல்லாரும் குளித்துவிட்டுச் சமையல் செய்து சாப்பிட்டோம். மறுநாள் காலை நான்கு குதிரைகளுடன் மூன்று ஆட்களும் வந்து சேர்ந்தனர். ஒரு குதிரையில் சாமான்களை ஏற்றிக்கொண்டோம். மூன்று பெண்களும் மூன்று குதிரைகளில் ஏறிக்கொண்டனர். பிறகு எல்லாரும் கயிலைமலையை வலம் வரத் தொடங்கினோம். ஓரளவு ஏற்றமான பாதையின் ஓரத்திலேயே நடந்து சென்றோம். எட்டு கி. மீ. தூரம் நடந்த பிறகு கயிலையின் தெற்கு முகத்திற்கு வந்து சேர்ந்தோம். அங்குக் கருப்பூரம்,பத்தி முதலியவைகளைக்கொண்டு பூஜை செய்தோம். அங்கிருந்து ஓர் ஓடையின் கரை வழியாகவே வடக்கு நோக்கி நடந்தோம். அதனருகில் கற்குவியல் ஒன்று சின்னபின்னமாகக் குவித்து வைக்கப்பட்டிருந்தது. திபேத்தைச் சீனர்கள் ஆக்கிரமித்துக் கொள்வதற்கு முன்னால் அவ்விடத்தில் ஒரு புத்த மடாலயம் இருந்திருக்கிறது. அந்தக் கற்களில் பாலி மொழி வாசகங்கள் செதுக்கி வைக்கப்பட்டிருந்தன. கயிலைமலையின் நான்கு புறங்களிலும் நான்கு மடாலயங்களை நிறுவிப் புத்த பிட்சுக்கள் அங்குத் தங்கி ஆண்டு முழுவதும் பூஜை செய்து வந்ததாகக் கூறப்படுகிறது. இதே போன்று மானசரோவரம் ஏரியைச் சுற்றிலும் ஆறு புத்த மடங்கள் இருந்தனவாம். அத்தகைய இடங்களில் கட்டடம் அமைப்பதே மிகச் சிரமமான காரியம்.

கயிலை மலையின் வடபகுதியில்தான் இயற்கை எழில் அற்புதமாக உள்ளது. அது மதுரை, சிதம்பரம்,இராமேஸ்வரம்போன்ற ஊர்களில் உள்ள கோயில்களின் சுற்று மதிலைப்போன்று அமைந்துள்ளது. அவ்வாறே ஆயிரக்கால் மண்டபம், பலி பீடம், துவஜஸ்தம்பம் போன்ற உருவங்களிலும், இடப் பக்கம் அம்பிகை, கணபதி, முருகன் ஆலயங்களைப் போன்ற தோற்றங்களிலும் இயற்கை எழில் அமைந்துள்ளது. கலைக் கோயில் போன்று விளங்கிய இவற்றையெல்லாம் கண்டு களித்துவிட்டுப் பதினைந்து கி.மீ. சென்றபின் ஓர் ஓடையின் கரையில் அமைக்கப்பட்டிருந்த ஒரு கூடாரத்தை அடைந்தோம். 14000 அடி உயரத்திலுள்ள இந்தக் கூடாரத்தில் பத்துப்பேர் தங்கலாம். அங்கு ஒரு திபேத்தியக் காவல்காரன் இருந்தான். எங்களுக்கு ஸ்டவ், இரண்டொரு பாத்திரங்கள் தரப்பட்டன. நாங்கள் நடந்து களைத்துப்போயிருந்ததால் சமைக்க முடியவில்லை. முந்திரி, திராட்சை ஆகிய பழங்களைச் சாப்பிட்ட பிறகு பவுடர் பாலைப் பருகிவிட்டுத் தூங்கச் சென்றோம். இப்பகுதியில் புல் அதிகமாக வளர்ந்திருப்பதால் திபேத்தியர்கள் கூடாரங்களில் தங்கி கால்நடைகளை மேய்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் விலைக்குத் தருவதாகச் சொன்ன பாலை வேண்டாம் என்று சொல்லிவிட்டோம். நாங்கள் கொண்டு சென்றிருந்த கம்பளி உடைகளை எல்லாம் அணிந்து கொண்டு தூங்கும் பைக்குள் (sleeping bag) படுத்துக்கொண்ட போதும் அங்கு நிலவிய கடும் குளிர் உடம்பைத் தாக்கியது.

இரண்டாவது நாள் கயிலை மலையைச் சுற்றிச் சுமார் 4,500 அடி உயரத்தில் முப்பது கி. மீ. தூரம் நடந்தாக வேண்டும், அதாவது 18,500அடி உயரத்திற்குச் சென்று பிறகு கீழே இறங்கவேண்டும். ஆகையால் காலை ஐந்தரை மணிக்கெல்லாம் சிற்றுண்டி அருந்திவிட்டு நடக்க ஆரம்பித்தோம். ஒரு

கி.மீ.தூரம் சென்றதும் ஓர் ஓடையைக்கடக்க வேண்டியிருந்தது. அவ்வோடையில் சிறிதளவு தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. சிறு சிறு கற்கள் ஓடை முழுவதும் கிடக்கின்றன. மிகக் கவனமாக நடந்துசென்றாலும் கால் வழுக்குகிறது. மிகச் சிரமப்பட்டு ஓடையைக் கடந்து சென்றோம். சிறிது தூரம் சென்றதும் ஒரு பெரிய ஓடை குறுக்கிட்டது. குதிரையின் மீது ஏறித்தான் அதைக் கடக்கவேண்டியிருந்தது. தண்ணீர் ஆழமாக உள்ள இடங்களில் குதிரைக்கும் கால் வழுக்குகிறது. அப்பொழுதெல்லாம் கைலாசபதியைத் தவிர வேறு கதி இல்லாததால் நம்மை அறியாமல் பாடவும், இறைவனைப்பற்றிச் சிந்திக்கவும் செய்கிறோம். ''நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே'' என்னும் கோட்பாடு உறுதிப்படுகின்றது. ஓடையைக் கடந்து சென்று மேலே பார்த்தால் மலையின் மேல்மட்டம் கண்ணுக்குத் தென்படுவதில்லை. 4,000 அடிக்கு மேல் ஏற வேண்டி இருக்கிறது. ஒவ்வோர் கால் அடியையும் மேலே தூக்கித் தூக்கி வைத்து ஏற்றத்தில் பத்து அடி தூரம் ஏறியதும் அதற்கு மேல் கால் நடக்க மறுக்கிறது. அங்குக் காற்றில் பிராணவாயு குறைவாக இருப்பதால் வாயாலும், நாசியாலும் சுவாசித்தாலும் போதாமல் இளைப்பும், களைப்பும் உண்டாகின்றன. மூக்கிலிருந்து நீர் சொட்டிக் கொண்டே இருக்கிறது. பாதையோரத்தில் இருக்கும் பாறையின்மீது உட்கார்ந்துகொண்டு மேல் நோக்கிக் கயிலை மலையைப் பார்க்கும் பொழுது மனதில் புத்துணர்ச்சி ஏற்படுகிறது. ''கண்கொண்டு காண, கருத்தொன்று நோக்க, பண்ணொன்று பாட'' என்னும் உணர்ச்சி தோன்றுகிறது. அவ்வாறு சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தால் களைப்பு, சலிப்பு எல்லாம் பறந்துவிடுகின்றன. வசதியான பாறையில் உட்கார்ந்து முந்திரி, திராட்சை, மாங்காய் வற்றல் போன்றவற்றைச் சாப்பிட்டு விட்டுக் களைப்பு நீங்கியவர்களாக மேலும் நடந்தோம். இரண்டாவது நாள் கயிலையை வலம் வரும்பொழுது மனிதனுக்கு உலக வாழ்க்கையில் இதற்கு மேல் வேறு சிரமம் உண்டாக முடியாது என்னும் எண்ணம் உண்டாகிறது. 'கட்டுவிளை நம்பினோர் கைவிடப்படார்' என்னும் உறுதியுடன் தொடர்ந்து நடந்து மேலே சென்றால் மூன்று, அல்லது நான்கு அடி உயரம்வரை ஒரே பனி மணலாக இருக்கின்றது. அதன் மீதும் இரண்டு கி. மீ. தூரம் வரை நடக்க வேண்டியிருந்தது. அங்குதான் எங்கள் யாத்திரையின் மிகக் கஷ்டமான நிலையை அனுபவித்தோம். குதிரைகளும் நடக்கச் சிரமப்பட்டதால் அதில் ஏறி வந்தவர்களையும் இறக்கி விட்டுவிடுகிறார்கள். மூச்சு விடுவதற்கே மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. பனி மணலுள் இரண்டு அல்லது மூன்று அடி ஆழம் கால் அழுந்துகிறது. எங்கு பார்த்தாலும் பனி மணலாக இருப்பதால் கீழே உட்காரவும் முடியாது. 'உன்னை மறந்திடுவனோ, மறப்பறியேன், மறந்தால் உயிர்விடுவேன் கணந்தறியேன்' என்னும் நிலையில் ஓர் அருட்சக்தியின் துணைகொண்டு நடந்து செல்ல வேண்டும் என்னும் கருத்துடன் சென்றோம். உச்சியை அடைந்ததும் இனி ஏற்றம் இல்லை என்று அறிந்ததும் உற்சாகமாய் இருந்தது. கயிலை மலையைக்காணும் போதெல்லாம் இவ்வரிய காட்சியைக் காண்பதற்காக இன்னும் எவ்வளவு சிரமப்பட்டாலும் தகும் என்று நினைத்தோம். கயிலை மலையைக் காணும் பாக்கியம் பெற்றதற்காகப் பெரிதும் மகிழ்ச்சியடைந்தோம். அப்பொழுது காலை பதினொரு மணிக்குமேல் ஆகிவிட்டது. மேலும் இரண்டு பங்கு தூரத்திற்கும் மேல் நடந்தால்தான் எங்கள் கூடாரத்திற்குப் போய்ச் சேரமுடியும். உடலில் நடப்பதற்கான சக்தி இல்லையென்றாலும் இறைவனின் நாமத்தைத் துணையாகக் கொண்டு எங்கள் மனோபலத்தினால் உடலை இழுத்துக்கொண்டு இறங்கினோம். சுமார் ஒரு கி. மீ. தூரம் சென்றதும் கயிலையின் வடக்கு முகம் அல்லது காளிபீடம் வருகிறது. அங்கு உட்கார்ந்து இளைப்பாறிவிட்டுப் பூஜை செய்தோம். மேலும் சிறிது தூரம் நடந்ததும் கௌரிகுண்டம் என்னும் குளம் இருந்தது. அதைச் சுற்றிலும் இயற்கையாகவே அழ

கான படிக்கட்டுக்கள் அமைந்துள்ளன. இளம் பச்சை நிறத்தில் அந்தக்குளம் பார்ப்பதற்கு இனிமையாக இருந்தது. கடும் குளிரின் காரணமாக நீரின் மேல் சுமார் அரைஅடி உயரத்திற்குப் பனிக்கட்டி மூடியுள்ளது. மிக அழகாக இருந்த அந்தக் குளத்தில் குளிக்க வேண்டுமென்ற ஆவல் எங்களுக்கு ஏற்பட்டது. ஆனாலும் மிகவும் களைப்புற்றிருந்ததால் ஆயிரம் அடிக்குக் கீழேயிருந்த அந்தக் குளத்திற்குச் சென்று குளித்து விட்டு வருவது சாத்தியமில்லை என்று நாங்கள் முடிவு செய்தோம். குதிரைக்காரனை அங்குச் சென்று தீர்த்தம் கொண்டு வரும்படி கூறினேம். அவனும் மறுத்து விட்டான். எனவே அக்குளத்தைத் தரிசித்த திருப்தியுடன் கீழே இறங்க ஆரம்பித்தோம். மூவாயிரம் அடி தூரம் வரை சிறு சிறு பாறைகளுக்கிடையில் அமைந்துள்ள குறுகலான பாதையில் நாங்கள் கைகளையும் கால்களையும் பயன்படுத்தி நடக்கவேண்டியிருந்தது. சிறிது நேரத்தில் ஆங்குத் தென்பட்ட பனிமயல் நிறைந்த ஓர் ஓடையைக் கடக்க நேர்ந்தது. உட்கார்ந்து இளைப்பாறுவதற்கு நிழலான பகுதி எங்குமே இல்லை. ஓடையின் சமவெளியான ஓரிடத்தில் பசும்புல் சிறிதளவு வளர்ந்திருந்தது. நாங்கள் அங்கே அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டோம். எங்களிடமிருந்த பழங்கள் முதலியவற்றைச் சாப்பிட்டு விட்டுத் தொடர்ந்து நடந்தோம். அப்போது பிற்பகல் மூன்று மணி இருக்கும். நாங்கள் நடந்து சென்ற பகுதி கயிலைமலையின் கிழக்குப் பகுதியாகும். நான்கு பெண்களும் குதிரைகளில் ஏறி வந்தார்கள். தெற்கு நோக்கி நாங்கள் சென்று கொண்டிருந்த பொழுது ஆங்காங்கே திபெத்தியர்கள் கூடாரங்களில் தங்கிக் கால்நடைகளை மேய்த்துக் கொண்டிருந்தார்கள். நாங்கள் கயிலைமலையை வலம் வரத் தொடங்கிய இடத்தில் மூன்று திபெத்தியர்கள் அம்மலையை அங்கப் பிரதட்சிணம் செய்து வருவதைக் கண்டோம். நடக்க ஆரம்பிக்கும் இடத்தில் நின்று சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வது போல் அவர்கள் விழுந்து கும்பிடுகிறார்கள். கையை நீட்டி ஒரு கோடு கிழித்து மறுபடியும் எழுந்து அந்தக் கோட்டிற்கு வந்து மீண்டும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறார்கள். இவ்வாறாக நாற்பத்தொரு கி. மீ. தூரத்தையும் சுற்றி வருகிறார்கள். உடலின் முன்பக்கம் பதனிடப்பட்ட தோல் ஒன்றைக் கழுத்திலிருந்து தொங்கும்படி அணிந்துள்ளார்கள். இடுப்பில் ஒரு கம்பள ஆடையை உடுத்தியுள்ளார்கள். ஒரு சிறு பையில் சிறிது ஆட்டோமாவு வைத்துள்ளார்கள். பகல் முழுவதும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்த பின் இரவில் அங்கேயே ஓரிடத்தில் தங்கிக் கொள்கிறார்கள். அவர்களுக்கு அப்போது வேனிற்காலம் ஆதலால் குளிரைப் பற்றிய கவலையில்லை. இடையிடையே கால்நடைகளை மேய்த்துக்கொண்டிருப்பவர்கள் அவர்களுக்கு உணவும், தங்குமிடமும் அளிக்கிறார்கள். திபெத்தியர்கள் ஆண்களும், பெண்களும் நாலைந்து பேர்களாகச் சேர்ந்துகொண்டு கயிலைமலையை வலம் வருகிறார்கள். அவர்களும் அங்கப்பிரதட்சிணம் செய்பவர்களுக்கு உணவு முதலியன தருகிறார்கள். அங்கப்பிரதட்சிணம் செய்பவர்கள் இதைப்பற்றியெல்லாம் எண்ணாது இறைவனையே நம்பி இருபத்தொரு நாட்களில் அங்கப்பிரதட்சிணம் செய்து முடிக்கின்றார்களாம். கயிலையாத்திரைவாசிகளைக் கண்டால் கைகூப்பி வணங்குகிறார்கள். அவர்களைப் பார்த்தால் பக்தியே வடிவெடுத்தவர்கள் போன்று காணப்படுகின்றார்கள். அவர்களுடைய மன உறுதியையும், தேக சிரமத்தையும் பக்தியையும் எண்ணிப்பார்த்தால் அவர்களுடைய பக்திக்கும் மனோதிடத்திற்கும் நாம் மிகக் கீழே இருக்கிறோமென்பதை அறியமுடிகிறது. இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டு நதிக்கரையில் ஓரமாகவே நடந்து வரும்போது ஒரு நல்ல மைதானம் வருகிறது. அந்த இடத்தில் கயிலையின் கிழக்குப் பக்கத்தில் ஒரு நல்ல பெரிய பௌத்தமடாலயம் இருந்து புத்த சன்யாசிகள் அங்கிருந்துகொண்டு கயிலைமலைக்குப் பூஜையும் வணக்கமும் செலுத்திக் கொண்டிருந்தார்களாம். இப்போது அம்மடாலயம் இடிக்கப்பட்டுள்ளது. அங்கு ஒரு

திபேத்தியர் அதற்குப் பூஜை செய்து கொண்டிருந்ததைப் பார்த்தோம். அங்குச் சிறிது நேரம் எல்லாரும் உட்கார்ந்திருந்து ஓய்வெடுத்தோம். அப்போது மாலை 6 மணி ஆகிவிட்டது. இன்னும் பத்துக் கி. மீ. தூரத்திற்கு மேல் நடந்தால்தான் கயிலை அடிவார முகாமிற்குப் போய்ச் சேர முடியும் என்று சொன்னார்கள். அதைக் கேட்டதும் எல்லாருக்கும் சிறிது கவலை. இன்னும் அவ்வளவு தூரம் நடந்தாகவேண்டுமா, அது முடியுமா, இங்கேயே தங்கிவிடலாமா என்று சிலர் சொன்னார்கள். அங்குத் தங்குவதற்கு வசதி போதாது.சிரமப்பட்டாவது கேம்பிற்குப் போய்ச் சேர்ந்துவிடுவது தான் நல்லது என்று முடிவு செய்து பெண்கள் குதிரையிலும் ஆண்கள் நடந்தும் புறப்பட்டோம். நடக்க நடக்கப் பாதை தீரவில்லை. ஒரளவு வெளிச்சம் இருக்கும்போது நதி ஓரத்தைக் கடந்து சென்றுவிட்டோம். சிறிது நடப்பதும், சற்று இளைப்பாறுவதுமாக நடந்து இரவு 10மணிக்கு முகாமிற்குப் பக்கமாகப் போய்ச்சேர்ந்தோம். ஓடையில் தண்ணீர் ஓடும் சப்தத்தைக் கேட்டு ஓடைக்குப் பக்கம் வந்து விட்டோம் என்று அறிந்தோம். ஆனாலும் ஓடையை எந்த இடத்தில் கடப்பது என்பது தெரியவில்லை. குதிரையில் சென்றவர்கள் ஒரு மணி நேரத்திற்கு முன்பு போய்ச் சேர்ந்திருந்தார்கள். ஓர் இளைஞன் வேகமாகச் சென்று எங்களுக்கு ஏதாவது சிற்றுண்டி தயார் செய்து வைக்கின்றேன் என்று சொல்லி முன்னால் சென்றிருந்தான். ஓடைக்கு இந்தக் கரையில் இருந்துகொண்டு நாங்கள் சப்தம் கொடுத்து அவர்களை விளக்குக் கொண்டுவரச் சொல்லி அவர்கள் வந்த பிறகு ஓடையைக் கடந்து முகாமிற்குச் சென்று சிறிது பவுடர்பால், காம்பிளக்ஸ், ஜூஸ் போன்றவைகளை அருந்திவிட்டுச் செயற்கரியசெயலைச் செய்து முடித்துவிட்டோம் என்ற எண்ணத்துடன் படுத்துக்கொண்டோம். மறுநாள் காலை 7 மணிக்கு மேல்தான் ஒவ்வொருவராக எழுந்திருக்க முடிந்தது. காலைக் கடன் முடித்து எளிய முறையில் சிற்றுண்டி தயார் செய்து சாப்பிட்டுவிட்டு 10 மணிக்கு மேல் எல்லாரும் பக்கத்தில் ஓடும் கயிலைநதி என்னும் சிறிய ஓடையில் குளித்துவிட்டு வந்து சமையல் செய்து ஓரளவு திருப்தியாகச் சாப்பிட்டோம்; ஓய்வெடுத்தோம். ஒருவாறு யாத்திரையை வெற்றிகரமாக முடித்து மானசரோவரம், கயிலாயகிரி இரண்டையும் வலம் வந்துவிட்டோம் என்ற திருப்தியுடன் இருந்தோம். அன்று மாலை எல்லாரும் கூட்டுப் பிரார்த்தனை செய்தோம். மறுநாள் காலைச் சிற்றுண்டி முடிந்ததும் அவரவர் சாமான்,மற்றும் படுக்கைகளைக்கட்டிமுடிப்பதற்குள் தக்களக் கோட்டையிலிருந்து லாரி கொண்டு வந்துவிட்டார்கள். கைலாசபதிக்கு ஜே, என்ற கோஷத்துடன் எல்லாரும் அவரவர் சாமான்களை லாரியில் ஏற்றிவிட்டு நாங்களும் ஏறிக்கொண்டோம். லாரியும் மானசரோவரத்தை நோக்கிப் புறப்பட்டது. இந்த ஜன்மத்தில் இனிக் கயிலையைக் காணும் பாக்கியம் கிடைக்காது என்ற எண்ணத்தோடு எல்லாரும் கவனமாகக் கயிலையங்கிரியைப் பார்த்துக் கொண்டே வந்தோம். மானசரோவரக் கரையில் உள்ள முகாம் அருகில் லாரி நின்றது. எல்லாரும் இறங்கிச்சென்று மானசரோவரத்தில் தீர்த்தம் எடுத்தோம். இதுதான் கடைசித்தட்வை என்று அதையும் பார்த்துக் கொண்டே இருந்தோம். அதற்குள் அந்த முகாமில் இருந்தவர்கள் எல்லாரும் லாரியில் ஏறி அது புறப்படத் தயாராகிவிட்டது. பிரியாவிடை பெற்றவர்கள் போன்று நாங்களும் ஓடி லாரியில் ஏறிக் கொண்டோம். லாரி தக்களக் கோட்டையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. சுமார் பதினைந்து கி. மீ. தூரம் ராக்ஷஸ ஏரிக்கரை வரும் வரையில் கயிலைக் காட்சியைப் பார்த்துக்கொண்டு வந்தோம். சென்ற ஒருவாரமாக ராக்ஷஸ ஏரிக்கரையை அடைந்தது முதல் இதுவரை கயிலைக் காட்சியைக் கண்ணார இரவும் பகலும் கண்டு உளம் கசிந்து உடலை மறந்து ஒரு பேருணர்வில் இருக்கக்கூடிய அனுபவங்களைப் பெறும் வாய்ப்புக் கிடைத்தது. இனி அகக்கண்ணால் கண்டு அதை மறவாதிருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு அந்தக் காட்சி கிடைக்கும்வரை பார்த்துக்

கொண்டே வந்தோம். சிறிது நேரம் தெரிவதும் பிறகு மறைவதும் ஆக இருந்து சிறிதுநேரத்தில் ஊனக்கண்ணுல் காண முடியாதவாறு மறைந்துவிட்டது கயிலைக் காட்சி. அன்று மாலை மூன்று மணிக்குத் தக்களக்கோட்டை வந்து சேர்ந்தோம். நாங்கள் அவலைக் கொண்டும் கான்பிளவரைக் கொண்டும் சிற்றுண்டி தயார் செய்து சாப்பிட்டோம். மற்றவர்கள் அசைவ உணவைச் சைனுக்காரர்களிடம் சாப்பிட்டார்கள். மறுநாள்முழுதும் அங்கு ஓய்வு என்று சொன்னுர்கள். எங்களிடம் மீதியிருந்த சைனுவின் 'யென்' என்னும் நோட்டுக்களை அவர்களிடம் கொடுத்து அமெரிக்கன் டாலராக மாற்றிக் கொண்டோம். அன்று பகல் உணவிற்குச் சமையல் செய்து சாப்பிடுவதற்காக ஸ்டவ், மண்ணெண்ணெய், இரண்டு பாத்திரங்கள் கேட்டோம். பாத்திரத்திற்கும், ஸ்டவ்விற்கும் வாடகை இரண்டு யென்னும், மண்ணெண்ணெய்க்கு ஒரு யென்னும், இரண்டு உருளைக்கிழங்கும் ஐந்து பீன்சும் கொடுத்து அதற்கு ஒரு யென்னும் பில்போட்டார்கள். எல்லாச் சாமான்களும் ஆயிரத்து நூறு மைல்களுக்கப்பால் இருந்து வாங்கிக் கொண்டு வரவேண்டியுள்ளதால் விலை அதிகமாகிறது என்று சொன்னுர்கள். அவைகளைக் கொண்டும் எங்களிடமிருந்த அரிசி, பருப்பு, சாம்பார் பொடி, ரசப் பொடிகளைக்கொண்டும் சமைத்துப் பதினைந்துபேர் திருப்தியாகச் சாப்பிட்டோம். இரவுக்கும் கொஞ்சம் வைத்துக்கொண்டோம். அன்றிரவே சாமான்களையெல்லாம் கஸ்டம்ஸ் அதிகாரிகள் சோதனை செய்த பிறகு மூட்டை கட்டி ஆபீஸில் வைத்து விட்டோம். மறுநாள் காலை மூன்று மணிக்குப் புறப்பட்டாக வேண்டும். அப்போதுதான் இந்திய எல்லைக்குப் பகல் பதினெரு மணிக்குள் வந்து சேரமுடியும். இரவு நேரத்திலேயே படுத்து உறங்கிக் காலை மூன்று மணிக்கு எல்லாரும் எழுந்து புறப்படத் தயாரானேம். சைனுக்காரர்களும் சாமான்களுக்கும் எங்களுக்கும் வேண்டிய குதிரைகளை அந்த நேரத்திற்கு வந்து சேர ஏற்பாடு செய்து மிக அன்போடு எல்லாரும் சேர்ந்து கைலாசபதிக்கு ஜே என்று சொல்லி வழி அனுப்பி வைத்தார்கள். இருபது கி.மீ. தூரத்தை சுமார் ஐந்துமணி நேரம் குதிரையின்மீது வந்து 8 மணிக்குப் பனிப்பகுதிக்கு வந்து சேர்ந்தோம். நாங்கள் திபேத்திற்கு வந்தபோது இருந்ததை விட இப்போது பனி உருகிப் பனிமணல் உள்ள பகுதி கொஞ்சம் குறைவாக இருந்தது; ஆனுல் தரை சிறிது சேருக இருந்தது. சாமான்களைத் திபேத்தியர்கள் தூக்கிக் கொண்டு போனுர்கள். நாங்கள் நடந்து போவது மிகச் சிரமமாக இருந்தது. கால் வழுக்குவதும் பனிக்குள் உள்ளே போவதும் மிகக் கஷ்டத்திற்குள்ளாக்கியது. எல்லாரும் வேறு கதியில்லாது இறைவனை நாடுவது, பிரார்த்திப்பது தவிர வேறு வழி இல்லை. இந்த ஒரு நாள் தானே என்று மூன்று கி. மீ. தூரத்தை மூன்று மணி நேரத்திலும் மிகுந்த கஷ்டத்துடனும் கடந்து இந்திய எல்லைக்குக் காலை பதினெரு மணி அல்லது பன்னிரண்டு மணிக்கு வந்து சேர்ந்தோம். அன்று ஆகாயத்தில் நிறைய மேகங்கள் மூடி இருந்ததால் மேட்டில் ஏறி எல்லைக்கு வரும்போது மணல் போன்று பனி மேலிருந்து விழ ஆரம்பித்தது. ஐந்து நிமிஷம் உடலைத் துடைக்காது இருந்துவிட்டால் உடம்பெல்லாம் பனிப் போர்வை போர்த்தியது போன்று ஆகிவிடும். ஆதலால் அடிக்கடி பனிமணலைத் துடைத்துக் கீழே தள்ளிக்கொண்டே நடக்க வேண்டி வந்தது. குளிரால் உடம்பெல்லாம் நடுங்கியது. இந்திய எல்லையை மிதித்ததும் இந்திய இராணுவத்தினரும், எல்லைக் காவலரும் மகிழ்ச்சியோடு கைலாசபதிக்கு ஜே என்று ஆரவாரம் செய்து கைகுலுக்கி வரவேற்றனர். கயிலை செல்லும் மூன்ருவது குழுவினர் தயாராக இருந்தனர். அக்குழுவில் தமிழ் நாட்டைச் சேர்ந்த பேரூர், திருப்பனந்தாள், காஞ்சிபுரம் சாதுக்கள் மூவர், ஈரோட்டு அன்பர்கள், தாய்மார்கள் எட்டுப் பேர் ஆகத் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் அதிகமாக இருந்தனர். அவர்களிடம் இரண்டொரு வார்த்தைகளுக்கு மேல் பேச முடியவில்லை. பனியில் நடந்து

வந்த கஷ்டம். குளிர்பனி விழுந்து கொண்டிருப்பதால் ராணுவத் தலைவர் அங்கு யாரையும் நிற்க விடவில்லை. பனி விழுவது சற்று அதிகமானால் எல்லாரும் இங்கேயே சமாதியாக வேண்டி வந்துவிடும். விரைவில் கீழே போய்ச் சேருங்கள் என்று யாரையும் அங்கு நிற்கவிடாது கீழே அனுப்பிக்கொண்டிருந்தார். கயிலைக்குச் செல்ல இருந்தவர்களும் மிகுந்த சிரமப்பட்டு மேலே ஏறி வந்திருந்தார்கள். அவர்களாலும் சரியாகப் பேச முடியவில்லை. இரண்டொரு வார்த்தைகளோடு முடித்துக் கொண்டு பனியைத் தாண்டி விரைவில் கீழே மண் பகுதிக்கு வந்தோம். தெய்வாதீனமாக அன்று நிறையக் குதிரைகள் அங்கு வந்திருந்தன. இரண்டொருவரைத் தவிர எல்லாரும் குதிரையிலேயே கால்கூம் என்னும் முகாமிற்குப் பகல் 2 மணிக்குப்போய்ச் சேர்ந்தோம். அங்கு உணவு தயார் செய்து வைத்திருந்தார்கள். காலையிலிருந்து ஒன்றும் சாப்பிடாதிருந்ததால் உணவைக் கண்டதும் உயிர் வந்தது போன்ற உணர்வு ஏற்பட்டது. கிடைத்ததை நன்றாகச்சாப்பிட்டு விட்டு இரண்டு மணிநேரம் கூடாரத்தில் எல்லாரும் படுத்திருந்து விட்டு மாலை நான்கு மணிக்குப் புறப்பட்டு அன்றே காலாபாணி வந்து சேர்ந்தோம். அங்கு இருந்தவர்கள் எல்லாரும் அன்போடு வரவேற்றார்கள். இமிகிரேஷன் அதிகாரி மார்த்தோலா என்பவர் எங்களில் நாலைந்துபேரைத் தம் அறைக்கு அழைத்துச் சென்று, பிஸ்கட், வெங்காயபஜ்ஜி, டீ முதலியன கொடுத்து உபசரித்தார். அவர் எனக்குக் கொடுத்திருந்த காற்றுப் பாதுகாப்புச்சட்டையை அவரிடம் திருப்பிக் கொடுத்து 'நீங்கள் இதைக் கொடுத்திராவிட்டால் திபேத்திலிருந்து நான் திரும்பி வந்திருக்க முடியாது' என்று சொன்னேன். அவரும் தாம் இருபது ஆண்டுகளுக்கு முன்பு ஒரு தடவை திபேத் சென்று வந்ததாகவும் அந்த அனுபவத்தை வைத்துத்தான் இதை எனக்குக் கட்டாயப்படுத்திக் கொடுத்ததாகவும் சொன்னார். இரவு அங்குக் கூடாரத்தில் தங்கியிருந்தோம். சுமாரான மழை பெய்தது. எல்லாருக்கும் கஷ்டமான பாதையைக் கடந்து வந்து விட்டோம் என்ற ஆறுதலும் செயற்கரியசெயலைச் செய்து முடித்து விட்டோம் என்ற திருப்தியும் இருந்தது. பலருக்கு விரைவில் ஊர் போய்ச் சேரவேண்டும் என்னும் அவா. அதற்கு ஏதாவது வழி உண்டா என்று முயற்சிசெய்து பார்த்தார்கள். அதற்கு வசதியொன்றும் இல்லாததால் போன முறைப்படியே காலாபாணியில் இருந்து குஞ்சு, புக்கி, ஜிக்கு, மால்வா, கிர்க்கா ஆகிய தங்குமிடங்களில் ஐந்து இரவுகள் தங்கித்தான் வரமுடிந்தது. காலாபாணியிலிருந்து குஞ்சு என்னும் கேட் வரை ராணுவத் தலைவரும் டாக்டரும் கூட வந்து வழி அனுப்பிவைத்தனர். திரும்பும்போது ஒவ்வோர் இரவும் மழை பெய்தது. வரும்போது சிர்க்காவில் இருந்து பங்கு என்னும் ஊரில் தங்காமல் நேரே தவாகாட் என்னும் இடத்திற்கு வந்துவிட்டோம். கிர்க்காவில் இருந்து தவாகாட் என்னும் இடத்திற்கு இருபத்துமூன்று கி. மீ. தூரம். அன்று காலை புறப்பட்ட போது லேசாக மேகம் இருந்தது. கொஞ்ச தூரம் வந்தவுடன் மழைத்தூறல் ஆரம்பித்து தவாகாட் வந்து சேரும் வரை மழை லேசாகப் பெய்துகொண்டே இருந்தது. பலபேர் மழைக்கோட்டை சாமான்களோடு கட்டி அனுப்பிவிட்டதால் மழையில் நனைந்து கொண்டேதான் வர வேண்டியதாய்விட்டது. பன்னிரண்டாயிரம், பதினாறாயிரம், பதினெண்ணாயிரம் அடி உயரங்களுக்குப் போய்வந்திருந்ததால் அந்த மழையையும் குளிரையும் உடல் தாங்கிக் கொள்ளும் சக்தி உடைத்திருந்தது. நடப்பது அன்று கடைசி நாள் ஆக இருந்ததால் இறைவன் அன்று பெரிய சோதனைக்கு உள்ளாக்கி அதைத் தாங்கக்கூடிய நிலைமையையும் கொடுத்தான். அதுவும் அவன் அருள்தான் என்று எண்ணிக்கொண்டு பிற்பகல் 2 மணிக்குத் தவாகாட் வந்து சேர்ந்தோம். டார்ச்சூலாவிலிருந்து பஸ் வந்து காத்திருந்தது. U. P. டூரிஸ்ட் அலுவலகத்தில் உள்ளவர்கள் வந்து வரவேற்றார்கள். எல்லார்க்கும் தேநீர் கொடுத்து உபசரித்தார்கள்.

சாமான்கள் கொண்டு வந்த குதிரை, சாமான்கள் தூக்கி வந்த ஆட்கள், மூன்று பெண்கள் ஆகியோர் மிகத் தாமதமாக வந்தார்கள். எல்லாரும் பஸ்ஸில் முதலில் டார்ச்சூலா போய்ச் சேரத் திட்டமிட்டோம். பசி எல்லாருக்கும் அதிகமாக இருந்ததால் சாமான்களை இன்னொரு முறையில் எடுத்துக் கொள்ளலாமென்று வந்து சேர்ந்தவர்கள் எல்லாரும் பஸ்ஸில் ஏறிப் புறப்பட்டோம். சுமார் இரண்டு கி. மீ. தூரம் வந்தவுடன் மழையினால் மலை சரிந்து ரோடு முழுதும் மூடிக்கிடந்தது. ரோடு வேலை செய்யும் ஆட்களைத் தேடினால் அவர்கள் கிடைக்கவில்லை. நாங்கள் எல்லாரும் சேர்ந்து சுமார் ஒரு மணி நேரம் சரிந்து கிடந்த கற்களையெல்லாம் புரட்டி நதிக்குள் தள்ளிப் பாதையைச் சரிசெய்து பிற்பகல் மூன்று மணிக்கு டார்ச்சூலா வந்து சேர்ந்து பகல்உணவு அருந்தி ஓய்வு எடுத்தோம்.மறுபடி பஸ் தவாகாட் சென்று சாமான்களையும் கடைசியில் வந்தவர்களையும் ஏற்றி வந்தது. அன்று இரவு பைதராகாட் சென்று தங்கினால்தான் மறுநாள் மாலை டெல்லி போய்ச் சேரமுடியும் என்று சொன்னதால் மாலை ஆறு மணிக்கு டார்ச்சூலாவில் விட்டுப்போன சாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு புறப்பட்டோம். எல்லைக் காவலர் ஆறுபேர் எங்களோடு துணை, காவல் இவற்றிற்காக வந்தவர்கள் அங்கு விடைபெற்றுக்கொண்டு எங்களை அனுப்பி வைத்தார்கள். டார்ச்சூலாவிலிருந்து பைதராகாட் சுமார் 150 கி. மீ. தூரம். நான்கு மணி நேரத்தில் போய்ச் சேர்ந்துவிடலாமென எண்ணி வந்தோம். சுமார் 50 கி. மீ. தூரம் வந்தவுடன் மழையினால் ஒரு பெரிய மலை சரிந்து ரோடு முழுதும் அடைத்திருந்தது. நாங்கள் எல்லாரும் சேர்ந்து கற்களை அகற்றிப் பார்த்தோம். பெரிய பெரிய கற்கள் நிறைய இருந்ததால் அவைகளைப் புரட்டக் கூட முடியவில்லை. இரண்டு கி. மீ. தூரத்தில் இருந்த ஒரு கிராமத்திற்குச் சென்று நாலைந்து பேர்களைக் கடப்பாரை, சம்மட்டியுடன் கூட்டி வந்து அக்கற்களைப் புரட்டிப் போட்டுப் பாதையைச் சரிசெய்து இரவு ஒரு மணிக்குப் பைதராகாட் வந்து சேர்ந்து இரவு உணவு சாப்பிட்டுவிட்டுப் படுத்தோம். அந்த இரவும் நல்ல மழை பெய்தது. காலை ஆறரை மணிக்குப் புறப்பட்டுக் காலை ஒன்பதுமணிக்குச் சத்ராவத் என்னும் இடத்தில் வந்து காலை டிபன் சாப்பிட்டுவிட்டுப் பத்து மணிக்கு அங்கிருந்து புறப்பட்டோம். வழி நெடுக நல்ல மழை பெய்தது. கடவுள் கிருபையால் அன்று சாலை அடைபடவில்லை. பகல் பன்னிரண்டு மணிக்கு டனக்பூர் வந்து சேர்ந்தோம். மலைப் பாதையை விட்டு மைதானத்துக்கு வந்துவிட்டோம். அங்குப் பழங்கள்,தேநீர் போன்றவற்றைக்கொஞ்சம் சாப்பிட்டு அரை மணிநேரம் டிரைவர் ஓய்வெடுத்த பிறகு அங்கிருந்து புறப்பட்டோம். லக்னௌ போகும் அன்பர் ஒருவர் அங்கேயே இறங்கிப் பஸ்ஸில் சென்றுவிட்டார். பிற்பகல் இரண்டு மணிக்கு ருத்ராப்பூருக்குப் பக்கம் வந்துகொண்டிருந்தபோது எங்கள் பஸ்ஸின் இரண்டு சக்கரங்கள் பழுதாகிக் காற்று முழுதும் போய்விட்டது. நல்லவேளையாக ஒரு பெட்ரோல் நிலையத் தருகே வந்து பஸ் நின்றதால் அங்கேயே சக்கரங்களைச் சரிப்படுத்த வசதிகள் இருந்தன. அதற்குப் பக்கத்தில் இரண்டொரு டீக்கடைகளும் இருந்தன. வண்டியைப் பழுது பார்க்க நான்கைந்து மணி நேரம் எடுத்துக்கொண்டார்கள். மாலை ஐந்து மணிவரை பார்த்தோம். ஒரு சக்கரத்தைச் சரி செய்ததும் அடுத்த சக்கரம் பழுதாகிவிட்டது. இதைப் பார்த்துச் சலித்துப்போய் எல்லாருக்கும் நல்ல பசி, களைப்பு ஏற்பட்டதால் படுக்கவேண்டும் என்று தோன்றியது. நாங்கள் 12 பேர் வழியில் வந்த ஒரு வேனை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு ருத்ரப்பூர் சென்று சுற்றிப்பார்த்தோம். அங்கு எங்களுக்குச் சாப்பாடு தயார் செய்துவைத்துப் பகல் பன்னிரண்டு மணியிலிருந்து நான்கு மணிவரை காத்திருந்துபார்த்துவிட்டுச் சாப்பாட்டை எப்படியோ காலி செய்துவிட்டு எல்லாரும் போய்விட்டார்கள். இதையெல்லாம் விசாரித்துத் தெரிந்துகொண்டு ஒரு ஹோட்டலுக்குச் சென்று சாப்பிட்டுவிட்டு நாங்கள் அந்தச்சத்திரத்தில் ஓய்வெடுத்துக்

கொண்டிருந்தோம். இரவு எட்டு மணிக்குப் பஸ் ரிப்பேர் செய்து மற்றவர்கள் அந்தப் பஸ்ஸில் நாங்கள் இருந்த இடத்திற்கு வந்துசேர்ந்தார்கள். அதன் பிறகு அவர்களும் சாப்பிட்டனர். உடனே புறப்பட்டு இடசிவிகோயைச் சேரவேண்டும் என்று மூன்றில் இரண்டு பங்குபேரும் தங்கிக் காலேயில்தான் போகவேண்டும் என்று மற்றவர்களும் விவாதம் செய்து கடைசியாக இரவு பத்து மணிக்குப் புறப்பட்டு டெல்லி போய் விடலாம் என எல்லாரும் முடிவு செய்து புறப்பட்டோம். டெல்லிக்குப் பக்கம் வரும் போது எஞ்சின் பழுதாகி பஸ் மிக மெதுவாகத்தான் செல்ல முடிந்தது. எப்படியோ ஒருவிதமாக ஜுலே மாதம் 22ம் தேதி காலே 7 மணிக்கு டெல்லி சுந்தரலோக் கட்டடத்திற்கு முன்னுல் பஸ் வந்து சேர்ந்தது. எல்லாரும் கைலாசபதிக்கு ஜே என்ற கோஷத்துடன்பஸ்ஸைவிட்டு இறங்கி அவரவர் சாமான்களே எடுத்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் விடைபெற்றுக் கொண்டு வாடகைக்குக்கிடைத்த வாகனங்களே அமர்த்திக்கொண்டு அவரவர் தங்குமிடங்களுக்குப் போய்ச் சேர்ந்தனர். டெல்லியில் அவரவர்கள் வசதி போல் இரண்டொரு நாள் தங்கி விமானம், புகைவண்டி, பஸ் மூலமாக ஒவ்வொருவரும் சொந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தனர்.

இப்போது உள்ள முறையில் கயிலேமலே யாத்திரை டெல்லியிலிருந்து புறப்பட்டு டெல்லி வந்து சேர இருபத்தெட்டு நாட்கள் ஆகின்றன. இயற்கையில் ஏதாவது இடையூறு ஏற்பட்டால் இரண்டொரு நாட்கள் கூடுதலாக ஆகும். டெல்லியில் இருந்து பஸ் பிரயாணம் போகும் போது இரண்டு நாள், வரும்போது இரண்டுநாள். நடப்பது போகும்போது ஏழு நாள், வரும்போது ஏழு நாள் ஆக பதினுன்கு நாட்கள், திபேத்தில் பத்து நாட்கள் ஆக இருபத்தெட்டு நாட்கள். மொத்தமாகப் பிரயாணத்திற்குச் சுமார் ஆறு வாரங்கள் தேவைப்படுகின்றன. பாஸ்போர்ட் வாங்குதல், மற்றும் உறுதிப்பத்திரம், உடைகள், உணவுப் பொருள்கள், படுக்கை முதலியன தயாரிப்பதற்கு இரண்டு வாரங்கள் தேவைப்படுகின்றன.தொகையும் ரூபாய் எண்ணுயிரத்திலிருந்து ரூபாய் பத்தாயிரம் வரை தேவைப்படுகிறது. நல்ல உடல் அமைப்பும் உள்ளத்தில் உறுதியும் ஆர்வமும் தேவைப்படுகின்றன.

இந்த யாத்திரை போய்வருவதால் உடலுக்கு நல்ல பயிற்சி கிடைக்கிறது. மிகப் பெரிய ஏற்றம், இறக்கங்களில் நடத்தல், வெப்பதட்பங்களில் இருந்து பழகுதல் ஆகியபயிற்சி கிடைக்கிறது.பலபேர்களோடு பழகுதல், பல சூழ்நிலேகளேச் சமாளித்தல், பழக்கமில்லாத உணவுகளே ஏற்றுக் கொள்ளுதல், பசி, தாகம் உடலின் சக்திக்கு மீறிய உழைப்பைச் சகித்தல், காணற்கரிய, இனிய இயற்கைக் காட்சிகளேக் காணல், இறைவனேத்தவிர யாரும் துணே இல்லேயென்பதை அனுபவபூர்வமாக உணர்தல், சதா கடவுள் சிந்தனேயிலேயே இருப்பதற்கேற்ற சூழ்நிலே அமைகின்றன. கயிலேயைச் சுற்றிவரும் போதும் மானசரோவரத்தைச் சுற்றிவரும் போதும், மானசரோவரத்தினுள் கயிலேமலேயின் பிம்பத்தைக் காணும் போதும் மனதில் உண்டாகிற பேருணர்வும் பேரானந்தமும் உள்ளத்தை உயர்ந்த நிலேக்குக்கொண்டுபோகின்றன. உலகில் வேறெங்கும் அடைய முடியாத பேரின்பத்தை இங்கு அடைய முடிகின்றது.

அப்பர் சுவாமிகள் ஞானக் காட்சியில் கண்டு அருளிச் செய்துள்ள கயிலேத் திருத்தாண்டகம் முப்பது பாட்டுக்களேயும் யாத்திரை புறப்படுவதற்கு முன்பே காலே, மாலே பாராயணம் செய்துகொண்டு போனுல் அதிலுள்ள வர்ணனேகளேயெல்லாம் இன்றும் அப்படியே காணலாம். அத்தகைய பெரும் பேறு பெறக்கூடிய வாய்ப்பு இப்போது நமக்கும் கிடைத்துள்ளது. கைலேயைக் கண்டு தரிசித்துவரச் சாத்தியப்பட்டவர்கள் எல்லாரும் சென்று கண்டு கண்பெற்ற பயனேயும் மானுடப் பிறவியின் பெரும் பேற்றையும் அடைந்து வருவார்களாக. ஆண், பெண் அனேவரும் சென்று வரலாம். அதற்குக் கயிலேநாதனின் கருணேயும் முன்னின்று துணேபுரிவதாகுக. (முற்றும்)

# பொங்கு ஓம் பொங்கல் வாழி!

( புலவர் க. தில்லைக்கோவிந்தன் )

பொங்குவோம் பொங்கல் வாழி! பொறிபுலன் நெறிநில் லாமல்
எங்கணும் பொருந்தி இன்பம் இசைந்தவா நுகர்தல் என்னே?
தங்கிய உவகை யோடு தற்பரம் பொருளைச் சாரப்
பொங்குநீர் மடைமாற் றம்போல் பொறிமடை மாற்றி வாழி!

ஆற்றலன்(பு) அறிவாம் மூவர் அருள்நெறி விருந்து மாந்த
ஏற்றநற் கலமாம் மெய்யை மெய்ப்பொருட்(கு) இடமாக் கொண்டு
போற்றிசெய் கரணம் மூன்றும் புண்ணியன் பணிக்கே ஆக்கி
ஊற்றென இறைமை பொங்கும் உள்ளொளிப் பொங்கல் வாழி!

சக்திகுண் டலியைத் தூண்டித் தலையுச்சி தன்னில் ஏற்றி
முக்திசேர் அமுத தாரை முன்னவன் அருளால் துய்த்துப்
பக்திகொள் கர்ம ஞானப் பயிற்சியால் பேரா னந்தச்
சக்திசெம் பொருளைக் காட்டும் தவயோகப் பொங்கல் வாழி!

---

## செய்திகள்

**நிகழ்பவை :**

15-1-83 சனிக்கிழமையன்று கோவை மருத மலையில் அருணகிரிநாதர் அருள் நெறிக் கூட்டத்தினர் நடத்தும் படித்திருவிழாவில் ஸ்ரீமத் துருவானந்த சுவாமிகள் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றுவார்கள்.

21-1-83 வெள்ளிக்கிழமையன்று சிவகாசி அருள்மிகு மாரியம்மன் கோவில் கும்பாபிஷேக விழாவில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்துகொள்வார்கள்.

21-1-83 வெள்ளிக்கிழமையன்று பொங்கல் விடுமுறைக்குப் பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலப் பள்ளி திறக்கப்படும்.

26-1-83 புதன்கிழமையன்று ராசிபுரம் விவேகானந்த சங்கத்தினர் நடத்தும் விவேகானந்த ஜயந்தி விழாவில் ஸ்ரீமத் துருவானந்த சுவாமிகள் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றுவார்கள்.

'விவேகானந்தரின் சிந்தனைகள்' என்னும் தலைப்பில் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ள ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகளின் பேச்சுக்கள் ஜனவரி மாதம் 18, 24, 30 தேதிகளில் காலை 6-30 மணிக்குத் திருச்சி வானொலி நிலையத்திலிருந்து ஒலிபரப்பப்படும்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4 00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணாகரக் கடவுள் விரிவுரை | ... | 3-50 |
| பரிபூரணானந்தம் ஷை | ... | 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... | 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... | 3-00 |
| சுகவாரி ஷை | ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... | 3-00 |
| எங்குநிறைகின்றபொருள் ஷை | ... | 2-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... | 2-00 |
| விரதவீரர் பீஷ்மர் ஷை | ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி ஷை | ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| சந்நியாசி | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) | ... | 1-00 |
| தவப்புதல்வர்கள் | ,, ... | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ரூ. | 1-00 |
| ஞானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 1-00 |
| ப்ரஹ்லாதன் (நாடகம்) | ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) | ... | 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சக்தி தத்துவம் | ... | 0-70 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக் கடவுள் | ... | 0-50 |
| கர்மகாண்டம்எது? ஞானகாண்டம்எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| கந்தர் அநுபூதி | ... | 0-25 |
| The Bhagavad Gita (11th Imp) | ... | 24.00 |
| Tirukkural ( with plastic cover ) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| *Introducing the Gita | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The Student | ... | 1-25 |
| TAT TVAM ASI *That Thou Art* IN Tayumana Swami | ... | 1-00 |
| *The Nursery School | ... | 1-00 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 5-00ம், மஞ்ஜரிக்கு ரூ. 1-80ம் மஹாபாரதத்திற்கு ரூ. 1-80ம் இராமாயணத்திற்கு ரூ. 1-60ம் தினசரி தியானத்திற்கு ரூ 1-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 3-00 முதல் ரூ. 5-00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

## ஸ்ரீ தாயுமான சுவாமி தபோவனம்
லக்ஷ்மிபுரம், வெளிப்பட்டணம், ராமனுதபுரம்-623 535.

# குருபூஜையும் அந்தர்யோகமும்
1983 பிப்ரவரி 5, 6 தேதிகளில்

தை மாதம் விசாக நக்ஷத்திரத்தன்று ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் மஹா சமாதி நிகழ்ந்தது. ஆகையால் ஆண்டுதோறும் குருபூஜை தை மாதம் விசாக நக்ஷத்திரத்தன்று நிகழ்ந்து வருகிறது. 1983ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 5 ஆம் தேதி சனிக்கிழமை இவ்வைபவம் நிகழும். அன்பர்களும், தாய்மார்களும் இதில் கலந்து கொள்ளும்படி வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள். நிகழ்ச்சிமுறை வருமாறு:

5—2—1983 காலை

| மணிமுதல் | மணிவரை | |
|---|---|---|
| 4-30 | | திருப்பள்ளி எழுச்சி |
| 6-00 | 7-00 | சிவ நாம ஜபம் |
| 8-00 | 9-00 | ஸ்படிகலிங்கத்தின் வாயிலாகத் தாயுமான சுவாமிக்கு அபிஷேகம் அதே வேளையில் பஜனையும் நடைபெறும் |
| 9-00 | 9-30 | தாயுமானவர் பாடல் சமர்ப்பணம் |
| 9-30 | 11-45 | சிவ சஹஸ்ரநாம அர்ச்சனை, தனித்தனியாகப் பூ சாத்தி வணங்குதல் |
| 11-45 | 12-00 | நிவேதனம், தீபாராதனை |
| 12-15 | | மகேஸ்வர பூஜை, அன்னப் பிரசாதம் வழங்குதல் |

மாலை

| | | |
|---|---|---|
| 4-00 | 5-00 | பஜனை |
| 5-00 | 5-30 | தபோவனக் கலைக்கூட குழந்தைகளின் கலைநிகழ்ச்சி |
| 5-30 | 8-30 | ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் தலைமையில் தக்க பேச்சாளர்களைக்கொண்டு அறவுரை |

# அந்தர்யோகம்

1983ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 6ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 5 மணி முதல் அன்று இரவு 7-30 மணிவரை அந்தர்யோகம் நிகழும். இதில் கலந்து கொள்ள விரும்புகிறவர்கள் உணவுச் செலவிற்கு ரூபாய் எட்டு ஸ்ரீதாயுமான சுவாமி தபோவனத்தில் நேரில் செலுத்தவேண்டும். உள்ளூர் அன்பர்களும் தாய் மார்களும் பதிவின்றி நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளலாம்.

இங்ஙனம்
சித்பவானந்த

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.